# ஸித்தாந்தப் பிரகாசிகா

ஸர்வாத்மசம்பு இயற்றியது

தமிழ் மொழிபெயர்ப்பு

ஸித்தாந்த ரத்தினம்

**Dr. T. கணேசன்**

பாண்டிச்சேரி

பதிப்பு

ஸ்ரீ அகோரசிவாசாரிய டிரஸ்ட்

சென்னை

## நூல் விளக்கக்குறிப்பு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஸித்தாந்தப் பிரகாசிகா |
| பொருள் | : | சைவசித்தாந்தம் |
| ஆசிரியர் | : | ஸர்வாத்மசம்பு |
| மொழிபெயர்ப்பாளர் | : | Dr. T. கணேசன் |
| பதிப்பாண்டு | : | 07-02-2004 |
| பதிப்பாளர் | : | க. கார்த்திகேயன் |
| பதிப்பு | : | ஸ்ரீஅகோரசிவாசாரிய டிரஸ்ட் |
| மொழி | : | ஸமஸ்க்ருதம், தமிழ் |
| நூலின் அளவு | : | 14 cm X 21 cm |
| தாள் | : | மேப்லித்தோ |
| பக்கங்கள் | : | 100 |
| விலை | : | ரூ. 40/- |
| அச்சிட்டோர் | : | பாலா ஆப்செட் பிரிண்டர்ஸ், புதுவை. |
| கணினி வடிவமைப்பு | : | Dr. T. கணேசன்<br>P. பாஸ்கர் |

நூல் கிடைக்குமிடம்

**ஸ்ரீ அகோரசிவாசாரிய டிரஸ்ட்**

சென்னை

உ

சிவமயம்

## பதிப்புரை

திருச்சிற்றம்பலம்

தோகையம் பீலி கொள்வார் துவர்கூறைகள் போர்த்துழல்வார்
ஆகமச் செல்வனாரை அலர் தூற்றுதல் காரணமாக
கோகையம்மாக்கள் சொல்லைக் குறிக்கொள்ளன் மின்ஏழுலகும்
ஓகை தந்தாள வல்லான் உறையுமிடம் ஒற்றியூரே.

ஸ்ரீமத் திருஞான சம்பந்த சுவாமிகள்

**50ம் ஆண்டு திருமண நாள் விழா**

எல்லாம் வல்ல இறைவன் திருவருளாலும், ஸத்குரு நாதர்களின் நல்லாசியாலும் எங்களது ஸ்ரீ அகோர சிவாச்சார்ய டிரஸ்டின் மூலமாக பல நற்பணிகளை செய்து வருகிறோம். அதன் மூலமாக இன்று (07.02.2004) எங்களது அமைப்பின் உறுதுணையாளர் ஸ்ரீ செல்வகுமார் அவர்களின் பெற்றோர் ஸ்ரீ இராதாகிருஷ்ணன், ஸ்ரீமதி கிருஷ்ணவேணி ஆகியோரின் 50வது திருமண நாள் விழாவில் ஸ்ரீமத் ஸர்வாத்ம சம்பு சிவாச்சார்யார் அருளிய

சித்தாந்த பிரகாசிகா என்னும் நூலை வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறோம்.

## சித்தாந்தப்பிரகாசிகா

சித்தாந்தப் பிரகாசிகா என்னும் இந்நூல் ஸ்ரீமத் ஸர்வாத்மசம்பு சிவாச்சாரியாரால் அருளப்பட்டது. இதனுள் 7 பகுதிகளாக சைவசித்தாந்தத்தின் அடிப்படைத் தத்துவங்களை மிகவும் எளிமையாக விளக்குகிறார் ஆசிரியர். சைவ சித்தாந்தம் படிக்கத் துவங்கும் மாணவர்கள் இதுபோன்ற நூல்களை முதலில் படித்து பின்னர் மற்ற நூல்களை கற்றல் முறை. வடமொழியிலுள்ள மூலத்தை பாண்டிச்சேரி டாக்டர் ஸ்ரீ தி. கணேசன் அவர்களின் தமிழுரையோடு வெளியிடுகிறோம். மாணவர்கள் யாவரும் படித்து பயன்பெறவேண்டுகிறோம்.

## நன்றி

இந்நூல் வெளியீட்டிற்கு நிதியுதவி நல்கிய அன்பர் ஸ்ரீ சு.செல்வக்குமார் அவர்களுக்கும், மொழிபெயர்ப்பாளர் பாண்டிச்சேரி ஸ்ரீ தி. கணேசன் அவர்களுக்கும், பாலா ஆப்செட் பிரிண்டர்ஸ் அச்சகத்தாருக்கும்

ஸ்ரீ அகோர சிவாச்சார்ய டிரஸ்டின் சார்பாக நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

என்றும் அன்புடன்

க. கார்த்திகேய சிவம்

17.01.2004

சென்னை.

# முன்னுரை

ஸித்தாந்தப் பிரகாசிகை என்னும் பெயரில் நமக்குத் தற்போது மூன்று நூல்கள் கிடைத் துள்ளன; அவை ஸர்வாத்மசம்பு, இராமநாதர் என்னும் சைவ ஆசாரியர்களாலும் மத்தியார்ஜுனம் என்னும் திருவிடைமருதூரிலும் இயற்றப்பட்டவை. சைவ சித்தாந்தக் கருத்துக் களைப் பயிலப் புகுவோர்க்கு இந்நூல்கள் அக் கருத்துக்களை எளிய முறையில் தொகுத்து மனதில் இருத்திக் கொள்ள வழி செய்கின்றன. மேலும், இவை சாருவாகம், பௌத்தம், தொடங்கி பாசுபதம் ஈறாக உள்ள அனைத்துச் சமயங்களின் முக்கியக் கொள்கைகளையும் விளக்கி அவற்றினின்றும் சைவசித்தாந்தம் எவ்வாறு தத்துவக் கொள்கைகளிலும், முத்தி நிலையிலும் வேறுபட்டு விளங்குகிறது என்பதனையும் தெளிவாக்குகின்றன.

இம்மூன்று நூல்களும் தமிழ்நாட்டில் தோன்றி யவை; மத்தியார்ஜுன ஸித்தாந்ததீபிகை திருவிடைமருதூரிலிருந்த (மத்தியார்ஜுனமென்பது திருவிடைமருதூரைக் குறிக்கும் வட மொழிச்சொல்) மிகப் புகழ்பெற்ற சைவமடத்திலும்[1], ராமநாத ஸித்தாந்ததீபிகை தேவாரப்பாடல் பெற்ற தலமான திருப்பூவணத்திலமைந்த சைவமடத்திலும்[2] இயற்றப் பட்டன என்பது பலரும் அறியாத செய்தி. இவற்றின்

---

[1] मध्यार्जुनस्य मठाधिपेन बहुशः संवीक्ष्य सर्वागमान्

शैवानाम् सुखबोधनाय कृपया शर्वस्य सर्वात्मनः ।

मध्यार्जुनाख्यशिवे सन्मुक्तिदा सिद्धान्तदीपिका

दीक्षाचार्यपदारविन्दमनसा क्लृप्ता सताम् प्रीतये ॥ French Institute, Pondicherry யிலுள்ள T. 284 எண்கொண்ட காகிதப்பிரதி.

[2] श्रीमत्पुष्पवनाधीशधामप्राह्ममठवर्तिना ।

कालेनाल्पेन सर्वेषां सिद्धान्तार्थप्रकाशिका

सुबोधा रामनाथेन कृता सिद्धान्तदीपिका ॥ மேற்படி காகிதப் பிரதி.

திருப்பூவணம், திருவிடைமருதூர் ஆகிய தலங்களில் 12, 13 ஆம் நூற்றாண்டுகளில் புகழ்பெற்ற சைவமடங்கள் இருந்தமைக்குச் சான்றாகக் கல்வெட்டுகள் உள்ளன; அவை பற்றிய விரிவான

காலம் 13 ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டது எனக் கருத இடமுண்டு; மத்தியார்ஜுன ஸித்தாந்ததீபிகை இம்மூன்றனுள் காலத்தால் பிற்பட்டது எனக் கருதலாம். இவற்றுள் ஸர்வாத்ம சம்பு இயற்றியது சைவ உலகில் மிக நன்கு பயிலப்பட்டு வந்துள்ளது; ஏனைய இரண்டும் இன்னும் பதிப்பிக்கப்படாமலேயே உள்ளன. ஆகவே, அவ்விரண்டனைப் பற்றியும் இங்கு சிறிது சிந்திப்போம்:

மத்தியார்ஜுன ஸித்தாந்ததீபிகை செய்யுளும் உரைநடையும் கலந்த அமைப்பைக் கொண்டது; தொடக்கத்தில் ஏனைய சமயங்களான பௌத்தம், ஜைனம், நியாயம், சாங்கியம், பாஞ்ச ராத்திரம் ஆகியவற்றின் கோட்பாடுகளைச் சுருக்கமாக விளக்கி சைவஸித்தாந்தக் கொள்கைகளின் தனிச்சிறப்பை விளக்குகிறது. சைவஸித்தாந்த

---

குறிப்பை மா. இராசமாணிக்கனார் எழுதிய சைவசமய வளர்ச்சி என்னும் நூலில் காணலாம்.

சம்பிரதாயத்திற்கு மூலமான காமிகம், அஜிதம், சிந்தியவிச்வம், பராக்கியம் முதலிய ஆகமங்களிலிருந்தும், பஞ்சாவரண ஸ்தவம், ஸித்தாந்த ஸாராவளி, மாலிநீவிஜயம் ஆகிய நூல்களிலிருந்தும் மேற்கோள்கள் எடுத் தாளப்பட்டுள்ளன. தீக்ஷையின் வகைகள், அவற்றின் சுருக்கமான செயல்முறை, ஸதாசிவனின் ஐந்துமுகங்கள், மந்திரங்கள் முதலியனவும், தத்துவங்களின் தோற்றம், அவற்றின் சிறப்பம்சங்கள், ஆசாரியர், ஸாதகர் முதலியோரின் தனித்தன்மை ஆகியனவும் இந்நூலில் விளக்கப் படுகின்றன. மேலும், சக்தியின் சிறப்பு, அதன் முக்கியத்துவம், அதன் பரிணாமங்கள் முதலியவற்றையும் இந்நூலில் காணலாம். தைத்திரீய ஸம்ஹிதைக்கு பட்டபாஸ்கரர் எழுதிய விரிவான உரைநூல் இவ்விடத்தில் பிரமாணமாகக் கொள்ளப் படுகிறது. பிரணவமந்திரம் ஒன்றே வேதம், ஆகமம் என இருவகைப்பட்ட சாத்திரங்களுக்கும் மூல காரணம் என ஆசிரியர் எடுத்துரைக்கிறார். 28 ஆகமங்களுள் முதல் 10ம் சிவபேதம் எனவும் அடுத்த 18ம் ருத்திர பேதம் எனவும் வழங்கப்பட்டு அவற்றின் வேறு பாடுகளும் விளக்கம் பெறுகின்றன. வேதாந்தக்

கொள்கைகளின் தாக்கமும் சில இடங்களில் காணப்படுகிறது.

ராமநாதஸித்தாந்ததீபிகை[3] 420 அநுஷ்டுப் செய்யுள்களைக் கொண்டது; ஸத்யோஜ்யோதி, ராமகண்டர் ஆகிய தொன்மையான சைவ ஆசாரியர்களைக் குறிப்பிடுகிறார் இந்நூலாசிரியர். ஸித்தாந்தசாத்திரங்களின் தோற்றம், அவற்றின் பேதங்கள், அவற்றைப் பெற்றவர்கள், தீக்ஷை வகைகள், முத்தியில் ஆன்மா சிவபெருமானின் எல்லாக் குணங்களையும் பெற்று சிவசமமாக இருத்தல், ஆணவம், கருமம், மாயை ஆகிய மும்மலங்களின் செயல்பாடுகள், சமயம் முதலிய ஆசாரங்கள், நால்வகைப்பட்ட ஆசாரியர்கள், அவர்கள் அனுஷ்டிக்க வேண்டியவை முதலியனவும் விளக்கப்படுகின்றன. காலம், நியதி ஆகிய தத்துவங்களின் தோற்றம், அவற்றின் செயல் பாடுகள், அவற்றின் இன்றியமையாத தன்மை ஆகியனவும், புவனங்களின் பெயர்கள், அவற்றின் இருப்பிடம், வரிசை முதலியவற்றையும் ஆசிரியர் நன்கு

---

[3] சுவடிகளை ஒப்பு நோக்கி இந்நூலின் ஒரு சிறந்த பதிப்பை விரைவில் வெளிக்கொணர யான் திட்டமிட்டுள்ளேன்.

விளக்குகிறார். நூலில் பல இடங்களில் ஸத்யோ ஜ்யோதி சிவாசாரியாரின் போககாரிகை முதலிய நூல்களின் சொற்களையும் நடையையும் கையாண் டுள்ளார் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது. ஸ்ரீகண்டர் இயற்றிய ரத்னத்ரயம் என்னும் சைவசித்தாந்த நூலிலிருந்தும் சில செய்யுட்களை எடுத்தாள்கிறார் ஆசிரியர். இதிலிருந்து இந்நூலா சிரியர் காஷ்மீரத்தைச் சேர்ந்த தொன்மையான சைவ ஆசாரியர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி அவர்களின் கொள்கைகளை அப்படியே மேற் கொள்கிறார் என்பது தெளிவாகிறது. ஆன்ம ஞானம் ஒன்றே மோட்சத்திற்கு உபாயம் என்னும் வேதாந்தக் கொள்கையையும் ஆசிரியர் குறிப்பிடு கிறார். ஆகமங்களை அடிப்படையாகக் கொண்ட சைவசித்தாந்தக் கருத்துக்களை எளிதில் நன்கு அறிவதற்கு இந்த ராமநாதஸித்தாந்ததீபிகை மிகவும் உதவுகிறது என்பது நூல் அமைப்பிலிருந்தே நன்கு புலப்படுகிறது.

மற்றொரு முக்கிய கருத்து: திரிலோசனசிவா சாரியார் இயற்றிய ஸித்தாந்தஸாராவளி, மேலே விளக்கிய இரண்டு ஸித்தாந்ததீபிகைகள், ஸர்வாத்மசம்பு இயற்றிய ஸித்தாந்தப் பிரகாசிகை, திரிலோசனசிவர் இயற்றிய ஸித்தாந்த ரஹஸ்யஸாரம் மற்றும் ஸித்தாந்தஸமுச்சயம், ஸர்வமதோபந்யாஸ ஸித்தாந்ததீபிகை[4] ஆகிய நூல்கள் யாவும் சைவ ஸித்தாந்தப் பிரிவைச் சேர்ந்த ஆகமங்களின் சாரத்தை அவ்வாகமங்களைப் பின்பற்றியே இயற்றப்பட்டுள்ளன (இவற்றுள், ஸித்தாந்தஸாரா வளியையும், ஸர்வாத்மசம்பு இயற்றிய ஸித்தாந்தப் பிரகாசிகையையும் தவிர மற்ற நூல்கள் அச்சாக வேயில்லையென்பது குறிப்பிடத்தக்கது); அதன்

---

[4] இந்நூல் சாருவாகமதம் தொடங்கி சைவத்தின் உட் பிரிவுகளான பாசுபதம், மஹாவிரதம், சித்தாந்தம் ஈறான எல்லாச் சமயங்களின் கொள்கைகளையும் சுருக்கமாகவும் எளிதாகவும் செய்யுள் நடையில் விளக்கிக்கூறுகிறது; இதிலிருந்து இரண்டு சுலோகங்கள் சதரத்னஸங்கிரஹம் என்னும் நுலின் உரையான சதரத்னஸங்கிரஹோல்லேகநியில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. மேலும் 16ம் நூற்றாண்டில்

மூலம் அக்காலத்தில் தமிழ் நாட்டில் சைவ ஸித்தாந்தம் நன்கு பரப்பப்பட்டு வந்துள்ளது. இவர்களுள், திரிலோசனசிவர் மிகப் பழமை வாய்ந்ததும், புகழ்பெற்றதும், வட நாட்டில் 8, 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பல அரசபரம்பரையினரால் நன்கு ஆதரிக்கப்பட்ட துமான ஆமர்தகம் என்னும் சைவமடத்தைச் சார்ந்தவர் என்பதும், அவர் திருவெண்காட்டில் அமைந்த அம்மடத்தின் கிளையில் ஆசாரியராகத் திகழ்ந்தார் என்பதும் ஸித்தாந்தஸாராவளியின் உரையாசிரியரான

---

வாழ்ந்த மறைஞானதேசிகர் தன்னுடைய சிவஞானசித்தியார் சுபக்க உரையில் இந்த ஸர்வமதோபநியாஸஸித்தாந்ததீபிகை, ஸர்வாத்மசம்புவின் ஸித்தாந்தப்பிரகாசிகை முதலியன சித்தியார் பரபக்கத்திற்கு உதவிய ஆதாரநூல்கள் எனக் குறிப்பிடுகிறார். ஆகவே சித்தியார் இயற்றப்பட்டகாலம் 13 ஆம் நூற்றாண்டு என்பதல் ஸித்தாந்தப்பிரகாசிகை 12 ஆம் நூற்றாண்டிலேயே இயற்றப்பட்டிருக்கலாம் என்பது உறுதியாகிறது.

மேற்குறிப்பிட்ட சைவநூல்களின் சுவடிகள் சென்னையிலுள்ள அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் (Government Oriental Manuscripts Library) யிலும், French Institute, Pondicherry யிலும் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன.

அனந்தசம்புவின் கூற்று. மேலும் இந்நூல்கள் யாவும் 13 அல்லது 14 ஆம் நூற்றாண்டுகளிலேயே சைவ ஆசாரியர்களால் நன்கு பயிலப்பட்டு வந்துள்ளன என்பதும், 16 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மறை ஞானதேசிகர் முதலிய ஆசாரியர்களாலும் தங்கள் நூல்களில் மேற்கோள்களாகக் கொள்ளப்படும் பெருமை வாய்ந்தன என்பதும் நன்கு தெளிவாகின்றன. எனவே ஸர்வாத்மசம்புவின் ஸித்தாந்ததீபிகை 12 அல்லது 13 ஆம் நூற்றாண்டுகளில் இயற்றப்பட்டி ருக்கலாம் எனத் தோற்றுகிறது. 12 ஆம் நூற்றாண் டில் வாகீசபண்டிதர் இயற்றிய ஞானாமிர்தம் என்னும் தமிழ் நூலும் இந்த நூல்களின் வகையைச் சார்ந்தது எனக் கொள்ளலாம்.

அடுத்து, 12, 13 ஆம் நூற்றாண்டுகளில் மெய் கண்டார் தோன்றி சிவஞானபோதம் என்னும் அளவிற் சிறியதும் ஆனால் தத்துவ ஆழத்தில் அளப்பரிய துமான ஒரு நூலை யாத்து தமிழகத்தில் சைவசித்தாந் தத்திற்கு ஒரு புதிய சரித்திரத்தை ஏற்படுத்தினார்; இச்சிவஞானபோதம் நந்திபகவானால் முனிவர் களுக்கருளப்பட்டதால் சிவஞானபோதபரம்பரை நந்திபரம்பரை எனவும் வழங்கப்படுகிறது. பின்னர் அவருடைய சந்தானத்தைச் சேர்ந்த ஆசாரியர்கள்

உரை நூல்கள், வழிநூல்கள், சார்புநூல்கள் ஆகியன இயற்றிச் சிவஞானபோதத்தை ஆதாரமாகக் கொண்ட சைவசித்தாந்த பரம்பரையை வளர்த்துப் பரவச் செய்தனர். இதனால் மேலே குறிப்பிடப்பட்ட நந்திபரம்பரையைச் சாராதனவும், ஆகமங்களை மட்டுமே ஆதாரமாகக் கொண்டன வுமாகிய ஸித் தாந்ததீபிகை முதலான நூல்கள் 17 ஆம் நூற்றாண் டுக்குப் பின் சைவர்களால் தமிழ்நாட்டில் பயிலப் படாமல் மிகுதியும் வழக்கொழிந்தன.

மற்றொரு முக்கிய கருத்து: ஸித்தாந்ததீபிகை முதலிய நூல்களுக்கும் சிவஞானபோத பரம்பரை யைச் சார்ந்த நூல்களுக்கும் இடையில் கொள்கை களில் சில அடிப்படை வேறுபாடுகள் காணப்படு கின்றன என்பதும் அறிஞர்கள் மனதில் கொள்ள வேண்டிய செய்தி[5]. மெய்கண்டாருக்கு முன்பே தமிழ்நாட்டில் கோளகி, ஆமர்தகம் ஆகிய பல சைவமடங்களின் கிளைகள் தோன்றி மன்னர்களால்

[5] இவற்றைப் பற்றிய விரிவான சிந்தனைகளை "தமிழ்நாட்டின் சைவசித்தாந்த வரலாறு" என்னும் தற்சமயம் நான் மேற்கொண்டுவரும் எம்முடைய ஆராய்ச்சியில் எடுத்துக்கூற உள்ளேன். 7, 8 நூற்றாண்டுகளில் காஷ்மீரத்தில் தோன்றிய ஸத்யோஜ்யோதி, நாராயணகண்டர், இராமகண்டர்,

பெரிதும் போற்றப்பட்டு வந்துள்ளன; அத்தகைய மடங்களைச் சேர்ந்த ஆசாரியர்கள் மேற்குறிப்பிட்ட சைவ ஸித்தாந்த சாத்திரநூல்களை இயற்றி சைவத் திற்குப் பெருந்தொண்டாற்றியுள்ளனர்.

ஸர்வாத்மசம்பு இயற்றிய ஸித்தாந்தப் பிரகா சிகை முழுதும் உரைநடையில் அமைந் துள்ளது; ஆயுர்வேதம், நீதிசாத்திரம் வேதம் முதலியன தொடங்கி சைவஸித்தாந்தம் ஈறான அனைத்து சாத்திரங்களும் லௌகிகம், வைதி கம், ஆத்தியாத்மிகம், அதிமார்கம், மாந்திரம் என ஐவகையாகப் பகுக்கப்படுகின்றன. இந்த முறையை

---

ஸ்ரீகண்டர் முதலியோர்களாலும், போஜதேவர் ஆகியோர் களாலும் ரௌரவம், சுவாயம்புவம் முதலிய ஆகமங்களை ஆதாரமாகக் கொண்டு இயற்றப்பட்ட தத்துவப்பிரகாசம் ஆகிய நூல்களில் விளக்கப்படும் சைவஸித்தாந்தக் கோட்பாடுகளின் சுருக்கம் **Śivajñānabodha with the Laghuṭīkā of Śivāgrayogī** (Published by Sri Aghorasivacharya Trust, Chennai, 2003) என்னும் நூலின் ஆங்கில முகவுரையில் எழுதியுள்ளேன்.

ஸித்தாந்தப் பிரகாசிகையில் தான் முதன்முதலில் காண்கிறோம்[6]. எல்லாச் சமயங்களின் கொள்கைகளும் அவற்றின் முக்கிய அம்சங்களும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. வேதாந்தத்தின் பிரிவுகளான பாஸ்கரீயமதம், சப்தபிரஹ்மமதம் ஆகியனவும் விளக்கப்படுகின்றன[7]. சாக்த தந்திரங்கள் பாஸ்கரீய வேதாந்தக் கொள்கையான பரிணாமவாதத்தைப் பின்பற்றுவன என்பது இங்கு கூறப்படும் செய்தி. மாந்திரம் என்னும் பிரிவிலடங்கிய காருடம், தக்ஷிணம், வாமம், பூதம் ஆகிய தந்திரங்களின் கொள்கைகள், அவற்றின் பயன், ஸதாசிவரின் ஐந்து முகங்களுள் ஈசானம் தவிர ஏனைய நான்குமுகங்கள் வாயிலாக இச்சாத்திரங்கள் அருளப்பட்டமையும், ஒவ்வொரு முகமும் அந்தந்த சமயத்தின் வழிபாட்டுக்குரிய கடவுள் எனவும் இங்கு விளக்கப்படுகின்றன. சைவஸித் தாந்த சாத்திரக் கொள்கை

---

[6] பிற்காலத்தில் சதரத்னஸங்கிரஹம் என்னும் நுலின் உரையான சதரத்னஸங்கிரஹோல்லேகநியிலும், மறைஞானதேசிகர் இயற்றிய சிவஞானபோதோபநியாஸமென்னும் வடமொழிச் சிவஞான போத உரையிலும் இத்தகைய பாகுபாட்டைக் காணலாம்.

[7] இதையே சிவஞானசித்தியார் பரபக்கத்திலும் காண்கிறோம்.

களும் அவ்வாறே ஞானபாதப் பொருள்கள் சற்று விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றன; கிரியாபாதப் பொருள்களில் குறிப்பாக தீக்ஷையின் வகைகள், அவற்றின் பயன்கள் ஆகியன மட்டும் சற்று விரிவாகக் கூறப்படுகின்றன. முத்திநிலையில் ஆன்மா சிவபெருமானுக்குரிய ஸர்வஜ்ஞத்வம், ஸர்வ கர்த்ருத்வம், நித்யத்ருப்தத்வம், அநாதி ஸ்வ தந்த்ரத்வம், அலுப்தசக்தித்வம், அநந்தசக்தித்வம் ஆகிய அறுவகைக் குணங்களான ஷாட்குண்யம்[8] என்னும் உயர்ந்த குணங்களைப் பெற்றுச் சிவசம மாகத் திகழ்கிறது என்று ஆசிரியர் கூறுகிறார். ஆக, இந்நூல் ஸத்யோஜ்யோதி முதலான தொன்மையான சைவஸித்தாந்த ஆசாரியர்கள் பின்பற்றிய சிவசம வாதக் கொள்கையைச் சார்ந்தது. மெய்கண்ட பரம்பரையைச் சார்ந்த சிவஞானசுவாமிகளுடைய கொள்கை இதனினும் முற்றி லும் வேறுபட்டதாயினும் தமது மொழிபெயர்ப்பில் மூலநூலிலுள்ளவாறே

---

[8] ஸ்ரீகண்டரும் தம்முடைய பிரஹ்மஸூத்ரபாஷியம், I. 1. 1 ல் சிவபெருமானுக்குரிய ஷாட்குண்யமென்னும் ஐசுவரியத்தைக் குறிப்பிடுகிறார்.

மொழிபெயர்த் துள்ளார்கள் என்பது நோக்கத் தக்கது. லோகாயதம் தொடங்கி பாசுபதம் ஈறான எல்லாச் சமயங்களின் முத்திநிலைகள், இவையாவற்றி னின்றும் வேறுபட்டு மேலோங்கி நிற்கும் சைவ ஸித்தாந்தத்தின் முத்திநிலை நன்கு விளக்கப் படுகிறது. இவ்வாறாக, ஸீத்தாந்ததீபிகை, ஸித் தாந்தஸாராவளி, ஸித்தாந்தப் பிரகாசிகை முதலிய நூல்கள் காஷ்மீரம் முதலான தேசங்களில் தோன்றிய தொன்மையான சைவஸித்தாந்தக் கொள்கைகளைப் பின்பற்றித் தமிழ்நாட்டில் தோன்றிய நூல்களுள் கடைசியானவை எனத் தெரிகிறது. இக்காலத் திற்குப் பின் மெய்கண்ட சாத்திரநூல்கள் தோன்றிச் தமிழ்நாட்டில் சைவ ஸித்தாந்தம் சற்று வேறுவகை யான கொள்கைகளைக் கொண்டு பரவத் தொடங்கு கிறது; இதனைத் தமிழ்நாட்டுச் சைவஸித்தாந்த

வரலாற்றின் இரண்டாவது நிலையாகக் கொள்ளலாம்[9].

இம்மொழிபெயர்ப்பிற்கு நான் கொண்ட மூல நூல் காசி ஜங்கமவாடி மடத்தாரால் 1996ல் மூன்று கையெழுத்துப் பிரதிகளை ஆதாரமாகக் கொண்டு பதிப்பிக்கப்பட்டதும், இந்தி மொழிபெயர்ப்புடன் கூடியதுமான ஸித்தாந்தப் பிரகாசிகை.

திருவாவடுதுறை மடத்தைச் சார்ந்த மாதவச் சிவஞானசுவாமிகள் இந்நூலைத் தமிழில் மொழி பெயர்த்தருளினார்கள். அதன் நடை 18 ஆம் நூற்றாண்டு நடை; தற்காலத்தில் அதன் பொருள் விளக்கம் சற்றுக் கடினமாயிருத்தலின் அடியேனை இந்த ஸித்தாந்தப் பிரகாசிகைக்கு ஒரு எளிய தமிழ் மொழிபெயர்ப்பு ஆக்கித் தருமாறு பணித்தார் என்றும் என் அன்பிற்கும் பாராட்டுதலுக்கும் உரிய கார்த்திகேயசிவம். அவ்வாறே என் சிற்றறிவுக் கெட்டியவரை அதனைச் செய்துள்ளேன். குற்றங்கள் இருப்பின் ஆன்றோர்கள் அவற்றைப் பொருட் படுத்தாது மேலும் ஊக்குவிக்குமாறு வேண்டுகிறேன்.

---

[9] இதைப் பற்றிய விரிவான சிந்தனைகளையும் என்னுடைய மேலே குறிப்பிட்ட ஆராய்ச்சியில் கூற உள்ளேன்.

# सिद्धान्तप्रकाशिका

अवर्णविग्रहं देवं वर्णविग्रहवर्जितम् ।
वर्णविग्रहवक्तारं नौम्यहं स्तौमि सम्श्रये ॥
चराचरात्मकं विश्वमोतं प्रोतं च सर्वतः ।
पशुपाशभिदा येन नमस्तस्मै पुरद्विषे ॥

## शरीरमात्मा च

इह तावज्जातिकुलाद्यभिमानास्पदमिदं स्थूलदेहं पृथिव्यप्तेजोवाय्वाकाशानां समवायः । तत्र प्राक्तनपुण्यपापानुकूलं ब्राह्मणादिवर्णांश्च रूपश्रियौ इन्द्रियपाटवमपि बिभ्रन्तो नियतायुषो नियतभोगाश्च भवन्ति भोक्तार आत्मानः। एतेषां भोगपरिकरीभूतसृष्टिमारभ्य कलातत्त्वान्तानि त्रिंशताऽऽरब्धानि आत्मन्यात्मनि पृथक् पृथक् सूक्ष्मकर्मणा प्राप्तायुषां पूर्वं शरीरं विहाय तृणजलूकवद् आश्रयिष्यते । तदिदं शरीरं

तेन कृतानां पुण्यपापानामाश्रयम्। आत्मा शरीराद्न्यः ज्ञानक्रियारूपः नियः अमूर्तः व्यापकश्च। आणव-कार्म-मायीय-बैन्दव-रोधशक्त्यात्मकपाशपञ्चकबद्धः संसारी पुरुषः।

## कार्यदशकम्

अस्य भोगपरिकरीभूतसूक्ष्मभूततत्त्वानि कानीति चेत् पृथिव्यप्तेजोवाय्वाकाशतत्त्वानि कथितानि। इमानि पञ्च-भूतानि। एतेषां कारणं तन्मात्रपञ्चकं किमिति चेत् गन्धतत्त्वं रसतत्त्वं रूपतत्त्वं स्पर्शतत्त्वं शब्दतत्त्वं चेति। एतद्दशकं कार्यमित्युच्यते।

## कारणदशकम्

वाक्पादपाणिपायूपस्थानीति पञ्च कर्मेन्द्रियाणि। एतेषां व्यापारा वचनगमनादानविसर्गानन्दाः। श्रोत्रत्वक् चक्षुर्जिह्वा-घ्राणानीति पञ्च ज्ञानेन्द्रियाणि। एतेषां व्यापाराः शब्द-

स्पर्शरूपरसगन्धग्राहकाः। एतेषां वागादिपञ्चानां श्रोत्रादि-पञ्चानां च करणमित्यभिहितम्।

## त्रीण्यन्तःकरणानि

मनश्चाहङ्कारश्च बुद्धिश्चेत्येतत् त्रितयं श्रोत्रादीन्द्रियवदस्मात् शरीरात्तु बहिर्निर्गत्य व्यापारमात्राश्रयस्य शरीरस्यान्तरवकाशे स्थित्वा क्रियाप्रवर्तकत्वादन्तःकरणमित्येतेषां त्रयाणं नाम। अर्थानां सङ्कल्पनं च श्रोत्रादीन्द्रियाणां बाह्यविषयेषु प्रवर्तनं च मनसो वृत्तिः। अभिमानसङ्कल्पनं च प्राणादिवायूनां प्रेरणं चाहङ्कारवृत्तिः। अध्यवसायो बुद्धिवृत्तिः। एतद् रजतमेव न शुक्तिरिति निश्चयोऽध्यवसायः। इति पूर्वमुक्तानि त्रयोविंशति-तत्त्वानि।

## अहङ्कारसृष्टिः

एतेष्वध्यवसायकारणभूताद् बुद्धितत्त्वात् सात्विकराजसताम-सभेदेन भिन्नोऽहङ्कारो जायते। अत्र सात्विकादहङ्कारान्मनश्च श्रोत्रादिपञ्चज्ञानेन्द्रियाणि च जायन्ते। अत्र राजसाहङ्काराद्

वागादिपञ्चकर्मेन्द्रियाणि जायन्ते। अत्र तामसाहङ्काराद् गन्धादितन्मात्रपञ्चकं जातम्। एतस्मात् तन्मात्रपञ्चकाद् भूतानि पञ्च जातानि। धारणं च समूहीकरणं च दाहकत्वं चावयवघट्टनकरणं चेतरभूतचतुष्टयस्यावकाशदानं च पञ्चभूतानां वृत्तिः।

## गुणविवेकः

अत्र पृथिव्याः शब्दस्पर्शरूपरसाः सामान्यगुणाः गन्धस्त्व-सामान्यगुणः। अपां शब्दस्पर्शरूपाणि सामान्यगुणाः रसस्त्वसामान्यगुणः। तेजसः शब्दस्पर्शौ सामान्यगुणौ रूपं चासामान्यगुणः। वायोः शब्दः सामान्यगुणः स्पर्शस्त्व-सामान्यगुणः। आकाशस्य शब्द एक एव गुणः। अयं शब्दः प्रतिध्वन्यात्मकः वर्णात्मको न भवति।

## गुणतत्त्वम्

द्वाविंशतेः परस्य बुद्धितत्त्वस्य कारणं गुणतत्त्वमिति च सत्त्वमिति रज इति तम इति चाभिहितम् सुखदुःखमोहानां च कारणं भवति। अस्य गुणतत्त्वस्य कारणं प्रकृतितत्त्वम्।

गुणतत्त्वं चतुर्विंशतितत्त्वम्। प्रकृतितत्त्वं पञ्चविंशतितत्त्वम्। एतस्मिन्नुभयस्मिन् स्थितत्वे सति प्रकृतितत्त्वस्य कार्यं गुणतत्त्वमिति प्रतिपादितम्। गुणतत्त्वस्य कार्यं सुखदुःखमोहहेतुत्वं च स्वव्यतिरिक्तार्वाग्बुद्ध्यादित्रयोविंशतितत्त्वानां क्रमेण कारणत्वं च। पृथिवीतत्त्वमारभ्य प्रकृतितत्त्वान्तं पञ्चविंशतेरशुद्धाध्वेति नाम।

## मिश्राध्वविवेकः

इत ऊर्ध्वं रागतत्त्वम्। अस्य वृत्तिः प्रकृतिजातवस्तूनामात्मने प्ररोचनम्। अत ऊर्ध्वं नियतितत्त्वम्। अस्य वृत्तिरात्मना स्वेनैव कृतानि कर्माण्यात्मनैव भोक्तव्यानीति नियमनम्। इत ऊर्ध्वं कालतत्त्वम्। अस्य वृत्तिर्दीर्घकालं भुञ्जते स्वल्पकालं भुञ्जत इति पुरुषस्य भोगपरिच्छेदः। अतः परं विद्यातत्त्वम्। अस्य वृत्तिर्विषयोपरक्तां बुद्धिं पुरुषो गृह्णातीति कारभूतत्वम्। अस्मात् परं कलातत्त्वम्। अस्य वृत्तिरात्मनोऽनादिभूतताम्रकालिकावत् सहजमलशक्तेरेकदेशं प्रसाद्यात्मस्वरूपस्य प्रकाशनम्। अस्य कारणं मायातत्त्वम्।

अथ पूर्वोक्ततत्त्वोत्पत्तिक्रमः। मायातत्त्वे कलातत्त्व- विद्यातत्त्व-कालतत्त्व-नियतितत्त्व-रागतत्त्वानां पञ्चकम् उच्यते। एतेनावृतस्य भोक्त्रात्मनः पुंस्त्वमिति मलसद्भावात् पुरुषतत्त्वमिति व्यपदेशः। आत्मनो न जडरूपत्वम्। रागतत्त्वमारभ्य कलातत्त्वान्तानि पञ्चतत्त्वानि मिश्राध्वा इत्युच्यते।

## सूक्ष्मदेहः

एतान्येकत्रिंशत् तत्त्वान्यात्मन्यात्मनि प्रत्येकं सूक्ष्मदेहानि भवन्ति। एतेषां तुर्याणां भुवनजशरीराणामाश्रयाणां भुवनानाम् आश्रयाणि सर्वात्मनां साधारणानि त्रिंशत् तत्त्वानि। एतेषां सर्वेषां कारणमशुद्धमायातत्त्वम्। इदं मायातत्त्वं नित्यं व्यापकं समस्तात्मकर्माभिसम्बद्धं स्ववृत्तिद्वारेण ज्ञानक्रियाप्रकाशीभवदपि मोहकम्।

## शुद्धविद्येश्वरतत्त्वे

इतः परं द्वात्रिंशकं शुद्धविद्यातत्त्वम्। ततःपरमीश्वरतत्त्वं त्रयस्त्रिंशकम्। अस्मिन् शुद्धविद्यातत्त्वे सप्तकोटिमहामन्त्राः कामिकाद्यष्टाविंशतिसंहिताश्च नन्द्यादयोऽष्टौ गणेश्वराश्च सिद्धान्तशास्त्रेण पूज्यमानाः इन्द्रादिलोकपालाश्च एतेषाम् आयुधानि वज्रादीनि च वसन्ति। ईश्वरतत्त्वे विद्येश्वरा अनन्तादयोऽष्टौ वर्तन्ते।

## विद्येश्वरतत्त्वम्

एतेष्वनन्तः सर्वेश्वरत्वादेतेषां विद्येश्वराणां विद्यातत्त्ववासिनामन्येषां चेश्वरभूतः मायाक्षोभकश्च मायातत्त्वभुवनानां स्रष्टा च। किञ्चायं परमेश्वराद् भिन्नः अधिकाराख्यमलस्य पाकेन परमेश्वरेणानुगृहीतश्च भवति। अनेन सृष्टिरूपेणा णवकार्मबन्धद्वयवन्तः प्रलयाकला इत्यभिहिताः। आत्मराशौ मलपाकवन्तो निरधिकरणेनैव परमेश्वरेणानुगृहीता

अष्टादशाभ्यधिकशतरुद्राः सन्ति। एतेषु श्रीकण्ठरुद्रो मध्यमप्रलयान्ते प्रकृतितत्त्वान्तादर्वाक्तत्त्वेषु भुवनानां च स्रष्टा। आणवकार्ममायात्मकबन्धत्रितयेन युक्तानां सकलानामात्मनां राशौ ज्ञानयोगतपोध्यानादिभिर्विशिष्टश्च ब्रह्मविष्णुपदयोर्निर्वाहकश्च भवति। अस्य मध्यम-प्रलयसमये रागतत्त्वेऽवस्थानम्। पश्चात् सृष्टिकाले प्राप्तेऽशुद्धाध्वसृष्टिपूर्वं ब्रह्मविष्णुसृष्टीनाम् अधिष्ठाता स्थित्वाऽर्वाक्तनभुवनेश्वराणां च त्रयस्त्रिंशत्कोटीनां देवानामीश्वराणां च ब्रह्माण्डानि सृजति। ब्रह्माण्डे चतुर्दश भुवनं सकलात्मनामावासभूमिः।

## ११८ रुद्राः

पूर्वोक्तरुद्रेषु शतं रुद्राः पाञ्चभौतिकस्य ब्रह्माण्डस्य रक्षका भवन्ति। गुणतत्त्वे ब्रह्मविष्णुभ्यां सह स्थितो रुद्रभट्टारको मध्यमप्रलयपर्यन्तमधिकारं कृत्वेमौ ब्रह्माण्डपती ब्रह्मविष्णू चोपसंहृत्य स्वयं मिश्राध्वनि रागतत्त्वे वर्तते। अनेन सह वीरभद्रदेवश्च वर्तते। प्रकृतिमस्तकेऽष्टौ कलामस्तकेऽष्टौ श्रीकण्ठवीरभद्रौ च शतरुद्राः च एवमष्टादशाभ्यधिकशतरुद्राः

परमेश्वरेणानुगृहीताः शरीरिणो भवन्तो ब्रह्मविष्णुवद ज्ञानादिभिरस्पृष्टा ब्रह्मविष्णवादिपदान्यात्मकर्तृकज्ञानयोग-बलेन सम्पादयन्ति। एतेषाम् अष्टादशशतरुद्राणां मलपाकाद् दीक्षापूर्वकं परमेश्वरप्रसादाच्च पदप्राप्तिः। शुद्धविद्या-तत्त्वनिवासिनां मलपाकात् परमेश्वरप्रसादाच्च पदप्राप्तिः। एतेषां विद्येश्वराणां शरीरं बैन्दवम्। अष्टादशशतरुद्राणां शरीरं मायीयम्। ब्रह्मविष्णवादीनां शरीरं प्राकृतम्। अष्टादशशतरुद्राणां विद्येश्वराणां च स्वरूपमिव साक्षात् परमेश्वरस्य सकलानि स्वरूपाणि पूजाविधिषु ध्येयानि। ब्रह्मविष्णुशरीरस्य प्राकृतत्वात् परमेश्वरानुग्रहस्य पूर्वमसम्भ वाच्च ब्रह्मविष्णुशरीरवत् परमेश्वरः केनापि न ध्यायते। ब्रह्मविष्णुपदं पशुभूमिः। रुद्रपदमीश्वरपदमुभयं पतिभूमिः।

## अधिकार-भोग-लयतत्त्वानि

एवम्भूतादस्मादीश्वरतत्त्वादूर्ध्वं सदाशिवतत्त्वम्। अतः परं शक्तितत्त्वम्। अत ऊर्ध्वं शिवतत्त्वम्। एतत् तत्त्वत्रयं परमेश्वरस्याधिकारभोगलयतत्त्वे संज्ञानिमित्तम्। एतस्मिन् तत्त्वत्रये परमेश्वराद् व्यतिरिक्तानि कर्तृभूतान्यात्मान्तराणि न विद्यन्ते। लयभोगाधिकारपदानि श्रद्दधानाः साधकदीक्षया

दीक्षिता मन्त्रसाधकाः पश्चात् परमेश्वरप्रसादेन तत्तद्भुवनं प्राप्य भोक्तारो वैराग्यपर्यन्तं वा महासंहारपर्यन्तं वा स्थित्वा विद्येश्वरैः सह परमुक्ताश्चात्मानो भवन्ति। विद्यातत्त्वेऽकारादिक्षकारान्तानि एकपञ्चाशदक्षराणि कामिकाद्यष्टाविंशतिसंहिताश्च वैखरीरूपाणि वर्तन्ते। ईश्वरतत्त्वे प्रणवश्च सदाशिवतत्त्वे सकलो बिन्दुः सकलो नादश्च शक्तितत्त्वे सूक्ष्माभिधेयबुद्धिबीजमात्मन्यात्मनि पृथक् पृथग् भूत्वा सूक्ष्मनादात्मकस्तिष्ठति।शिवतत्त्वे कारणबिन्दुश्च। बिन्दोः शिवतत्त्वस्य च तत्त्वे भेदव्यपदेशो नास्ति। शिवभ तत्त्वमधिष्ठाय स्थितस्य सदाशिवस्य शक्तिः सकलः सकलासकलः निष्कलः व्यक्ताव्यक्तस्यात्मा व्यक्तमहेश्वरः व्यक्ताव्यक्तसदाशिवः निष्कल शिव इति च नाम स्थितानि।

## बिन्दुलक्षणम्

एतेषु षट्त्रिंशत्तत्त्वेषु बिन्दुर्नित्यो व्यापकोऽमूर्तः परमेश्वरस्य नित्याधिष्ठेयः शब्दार्थात्मकनादादिद्वारेणात्मनां सम्यग् ज्ञानस्य कारणं भवति अमोहकश्च मायीयव्यतिरिक्तसमस्तवस्तूनामुपादानं जडश्च।

## षडध्वानः

ततः पृथिवीमारभ्य शिवान्तानि षट्त्रिंशत्तत्त्वानि तत्त्वाध्वा। कालाग्निभुवनमारभ्यानाश्रितभुवनपर्यन्तानि भुवनानि द्विशत-चतुर्विंशद्भुवनाध्वा। अकारादिक्षकारान्तान्येकपञ्चाशदक्षराणि वर्णाध्वा। व्योमव्यापिमन्त्रात्मकान्येकाशीतिपदानि पदाध्वा। मूलब्रह्माङ्गरूपाणि द्वादशमन्त्राणि मन्त्राध्वा। निवृत्त्यादि पञ्चकलाः कलाध्वा। एतेषु कलातत्त्वभुवनात्मानस्त्रयो ऽध्वानो द्रव्यात्मकाः। वर्णपदमन्त्रात्मानस्त्रयोऽध्वानः शब्दात्मकाः। एतेषु भुवनाध्वा तत्त्वाध्वानमाश्रित्य वर्तते एवं तत्त्वाध्वा कलाध्वानमाश्रित्य वर्तते। वर्णपद-मन्त्रात्मकास्त्रयोऽध्वानो भुवनजशरीरापेक्षया वर्तन्ते। एतेषां षडध्वनां परमकारणं वस्तु कुण्डलिनी शुधमाया शुधविद्या ब्रह्मेति चोच्यते। तत्राशुद्धाध्वनां परमकारणमशुद्ध-मायेत्युच्यते। एते षडध्वान आत्मनः संसारः।

## त्रिविधाः पशवः

षडध्वव्यतिरिक्ता नित्या व्यापकाश्चेतनाः प्रतिशरीरं भिन्ना मलिनाः कर्मकर्तारः कर्मफलभोक्तारः किञ्चिज्ज्ञाः किञ्चित्कर्तारः सेश्वराश्च भवन्त्यात्मानः। एते बन्धभेदेन सकलः प्रलयाकलो विज्ञानाकल इति च त्रिविधा उच्यन्ते। एतेषामात्मनां मायाबन्धः कलादिपृथिव्यन्ततत्त्वानि भुवनभ भौवनादिरूपः कर्मबन्धो ज्योतिष्टोमब्रह्महत्याभ दिभिरुत्पन्नोऽपूर्वाख्यसंस्काररूपः पुर्यष्टकमध्यगतः बुद्धितत्त्वभ माश्रित्य सुखदुःखमोहात्मकफलश्च भवति।

## पाशपञ्चकम्

मलाख्यबन्ध आत्मनां ज्ञानक्रियावारक आत्मन्यात्मनि पृथक् पृथग् भूत्वा स्वकालान्तोपाध्यनेकशक्तिसहितनित्यव्यापक-जडद्रव्यं भवति। बैन्दवो बन्धो विद्यविद्येश्वरादिशरीराणां कारणम् सकलाख्यसंसारिभोगपरिकरीभूतः सूक्ष्मादि-वैखर्यन्तशब्दहेतुश्च भवति। निरोधशक्त्यात्मकबन्धो मायाकर्माणवबैन्दवपाशचतुष्टयस्यानादिधर्महेतुः शिवशक्ति-रेवोपचारात् पश इत्युपचर्यते। एवमात्मनां बन्धाः

पञ्चविधाः। तत्र शुद्धाध्ववर्तिनां बैन्दवो रोधशक्तिश्चेति पाशद्वयम्। मिश्राध्ववर्तिनां त्वेतद्द्वयम् आणवः कार्मश्चेति पाशचतुष्टयम्। अशुद्धाध्ववर्तिनां त्वेतच्चतुष्टयं मायीयं चेति पञ्चविधबन्धाः। एतेषु शुद्धाध्ववासिनां मुक्तात्मनामिव निरतिशयं सुखमेव दुःखस्पृष्टसुखदुःखमोहाश्च न सन्ति। अतो हेतोरयं शुद्धाध्वा इत्यभिधीयते। मिश्राध्ववासिनां तु निरञ्जनान् विहाय साञ्जनानां सावधिसर्वज्ञतायां सत्यामपि सुखदुःखमोहाः सन्ति। अतोऽयं मिश्राध्वा इत्यभिधीयते। अशुद्धाध्ववासिनां तु निरञ्जनान् विहाय साञ्जनानां केषांचित् सावधिसर्वज्ञतायां सत्यामप्यन्येषां किञ्चिज्ज्ञत्वं किञ्चित्कर्तृत्वं च सुखदुःखमोहाश्च सन्ति। अतो हेतोरयम् अशुद्धाध्वा इत्यभिधीयते।अत्र बैन्दवो मायीयश्चेति द्वौ पाशावागन्तुकौ कार्मपाशस्तु प्रवाहानादिर्भोगनाश्यः। आणवपाशस्तु कूटस्थानादिः स्वपाकान्ते परमेश्वरप्रसादात्मिकया दीक्षया निवर्त्यः। कार्मपाशस्तु विज्ञानयोगसंन्यासैर्भोगेन वा क्षीयते। एते ज्ञानादयः शास्त्रद्वारा सम्पाद्यन्ते।

## पञ्चविधानि शास्त्राणि

तानि च शास्त्राणि पञ्चविधानि- लौकिकम् वैदिकम् आध्यात्मिकम् अतिमार्गम् मान्त्रम् चेति। लौकिकं त्वायुर्वेददण्डनीत्यादिदृष्टफलं शास्त्रम्। वैदिकं च वेदेषु क्रियाभागमुद्दिश्य ज्योतिष्टोमादिपुण्यसम्पादितस्वर्गादिसाधक मीमांसाशास्त्रं च वेदविषयापौरुषेयसाधकम् पदार्थप्रमाणयोः परीक्षां कुर्वद्भी ऋषिभिः प्रणीते न्यायवैशेषिकशास्त्रे च। एतत्त्रितयं दृष्टादृष्टफलं शास्त्रम्। आध्यात्मिकं तु सांख्य-पातञ्जलवेदान्ताख्यान्युपनिषद्भागम् उद्दिश्य ऋषिभिः प्रणीतान्यात्मज्ञानफलानि शास्त्राणि। अतिमार्गं तु शास्त्रं रुद्रप्रणीतानि पाशुपतकापालमहाव्रतानि। मान्त्रं तु शिवप्रणीतसिद्धान्तशास्त्रम्।

## मीमांसाशास्त्रम्

मीमांसाशास्त्रस्य वक्ता भगवान् जैमिनिः। अनेन शास्त्रेण तु प्रतिपाद्यमानोऽर्थः-वाक्यलक्षणं च वेदा अपौरुषेया इति च प्रपञ्चो नित्य इति च। इष्टापूर्तं कर्मानुष्ठेयमिति च कर्मानुष्ठानम् एवानुष्ठातुः स्वर्गादिसाधनमिति च भौतिकशरीरेन्द्रियेभ्योऽन्ये आत्मानः एते चानेके एतेभ्य आत्मभ्यो विलक्षण ईश्वरः कश्चिन्न भवति इति च प्रतिपादितम्।

## वैशेषिकशास्त्रम्

वैशेषिकशास्त्रेण तु प्रतिपाद्यमानोऽर्थः- पृथिव्यप्तेजोवायव इति भूतानि चत्वार्यनित्यानि एतेषां कारणानि तत्तन्नामानो भिन्नाः परमाणव इति च एतेभ्योऽन्यच्छब्दकारणं नित्यं व्यापकं पञ्चममाकाशात्मकभूतमिति च। एतस्मादन्यो नित्यः काल ईश्वरश्च दिशश्च। एतेभ्यो भूतकारणशरी-रेन्द्रियेभ्योऽन्येऽमूर्ता नित्या आत्मानोऽनेके। एतेभ्यो व्यतिरिक्तं नित्यं ज्ञानहेतुकं मन आत्मन्यात्मन्यभि धीयमानमनादि। पृथिव्यप्तेजोवाय्वाकाशकालदिगात्म मनांसीति नव द्रव्याणि। एतेभ्यो व्यतिरिक्तः

शुक्लादिगुणपदार्थः एतस्मादन्य उत्क्षेपणादिः कर्मपदार्थः। अतोऽन्योगोत्वादिः सामान्यपदार्थः। पटे शौक्ल्यमित्यादिः समवायपदार्थः। एतेभ्यो द्रव्यगुणकर्मसामान्यसमवायेभ्यः पञ्चभ्योऽन्यो विशेषपदार्थः। एतेषु षट्सु आत्मनः पदार्थतत्त्वस्य मनःसंयोगाद् ज्ञानमुत्पद्यते। अनेन पुण्यापुण्यात्मकं कर्मानुष्ठानमुत्पद्यते अनेन पापात् पापात्मकं कर्मानुष्ठानमुत्पद्यते पुण्यात् पुण्यात्मकं कर्मानुष्ठानमुत्पद्यते। अनेन शरीरेन्द्रियाणि च। पुण्यापुण्यवशेन स्वर्गनरकप्राप्तिः। सर्वस्य निर्वाहक ईश्वरः। अस्य मनःसंयोगाद् ज्ञानोत्पत्तिः न तु स्वतः प्रसिद्धं ज्ञानम्। इत्थम्भूतेन शरीरिणां साधर्म्यवैधर्म्यज्ञानेन कर्मक्षयो भवति। मनःसंयोगजनितज्ञानं विना पाषाणकल्पो भवति। अयमेव मोक्ष इति च वेदा ईश्वरकर्तृका इति च।

## न्यायशास्त्रम्

न्यायशास्त्रेण तु प्रतिपाद्यमानोऽर्थः- प्रत्यक्षादिप्रमाणानि प्रमेयसिद्धार्थज्ञेयानि च वैशेषिकोक्तक्रमेणैव। पदार्था एते षोडशविधा इति च मोक्षलक्षणं च एतेषूक्तप्रकारमिति च ईश्वरपदार्थः प्रयोक्ता नित्य इति च। एतेच्छास्त्रद्वयप्रणेतारौ कणादाक्षपादौ च।

## सांख्यशास्त्रम्

सांख्यशास्त्रेण प्रतिपाद्यमानोऽर्थः– नित्या व्यापिका जडरूपा समस्तवस्तूनां कारणम् सत्त्वरजस्तमसां साम्यावस्था अमूर्ता च प्रकृतिरियम्। प्रकृतिश्चतुर्विंशतितत्त्वमिति च। एतत्कार्यं बुद्धितत्त्वमारभ्य पृथ्वीतत्त्वान्तानि त्रयोविंशतितत्त्वानीति च। एवम्भूतचतुर्विंशतितत्त्वेभ्योऽन्ये नित्या व्यापका अमूर्ता नानाविधाः सर्वकृत्सर्वज्ञत्वरहिता ज्ञानमात्रस्वरूपा आत्मानः। एवं पञ्चविंशतितत्त्वमिति च। एतेषां मुक्तिदशायां संसारदशायां च निर्विशेषं स्वरूपेऽशुद्धिर्नास्तीति च। अनादिसिद्धाया बुद्धिगताया अविद्याया वशात् सांसारिक-सुखदुःखज्ञानम् उत्पद्यत इति च। प्रकृतिपुरुषविवेक ज्ञानादविद्याया विनाशो मोक्ष इति च। आत्मभ्यो व्यतिरिक्त ईश्वर इति न कश्चिदिति च। एतच्छास्त्रप्रणेता कपिलः।

## पातञ्जलशास्त्रम्

पातञ्जलशास्त्रेण तु प्रतिपद्यमानोऽर्थ इत्थम् – प्रकृतिप्राकृते चात्मनश्च बन्धमोक्षौ च विवेकज्ञानवद्योगश्च योगपरिकर इति च। षड्विंशतितत्त्वम् ईश्वर एकः। अस्यात्मभ्यो विशेषः।

स्वाधिष्ठानता निर्वाणं चेत्याख्यावत्। केवलवस्तुस्वरूप-साधारणं चात्मज्ञानोपदेष्टृत्वं चेति। एतच्छास्त्रप्रणेता पतञ्जलिः।

## चतुर्विधा वेदान्तिनः

वेदान्तवादिनस्तु चतुर्विधाः-भास्करीयाः मायावादिनः शब्दब्रह्मवादिनः क्रीडाब्रह्मवादिनश्चेति। एतेषु भास्करीयाणां शास्त्रप्रतिपाद्यमानोऽर्थः- जडाजडात्मकसुरनरतिर्यगादिको वस्तुराशिरखिलो लोको ब्रह्मणः परिणामः। एतद् ब्रह्म सच्चिदानन्दात्मकं नित्यं व्यापकं च। एतदेवेश्वरो भवति। अस्य विकारत्वस्याज्ञानात् परिवर्तते संसारोऽयम्। एक एव परमार्थतः सत्यम्। अस्य विकाराणां च विकारत्वात्। वेदान्तज्ञानेन च शरीरव्यतिरिक्तात्मस्वरूपं भासते। तत्तत् परब्रह्मैवेति वेदनेन तल्लयो मोक्ष इति च प्रतिपादयन्ति। मायावादिनस्तु पूर्वोक्तं परब्रह्मैव परमार्थतः सत्यम् दृश्योऽन्योऽखिलांशोऽसत्यः शुक्तिकायां रजतवत्। जगदुपा-दानं माया इयं ब्रह्मवत् सत्या च न भवति शशविषाण-वदसत्या च न भवति। मायाया विलक्षणं ब्रह्मस्वरूपम् वेदान्तज्ञानेन स्वयमिति वेदनं मोक्ष इति प्रतिपादयन्ति। शब्दब्रह्मवादिनस्तु कारणं परं ब्रह्म प्रमेयदशायां

शब्दब्रह्मात्मकं भवति। अस्य विकारो जडाजडात्मकं समस्तवस्तु विनाशि अविनाशि वस्तुतः शब्दात्मैव तदेवं स्वरूपं भवतीति च वेदनं मोक्ष इति च प्रतिपादयन्ति। क्रीडाब्रह्मवादिनस्तु पूर्वोक्तं ब्रह्मैवाहम् अहमेकाकी न भवामि अहमेवोच्चावचैर्विकारवस्तुभिः सह बहुधा क्रीडामीत्यभि-सन्धिना ब्रह्म भवति बहु। तद्वस्तु नित्यं वस्तु स्वयमित्युप-लब्धिर्मोक्ष इति च प्रतिपादयन्ति। एतेषां चतुर्णां मतानां प्रणेता व्यासः।

## आस्तिकनास्तिकशास्त्राणि

मीमांसक-वैशेषिक-न्याय-सांख्य-पातञ्जल-वेदान्ता इति षट् शास्त्राणि वैदिकानि। एतेषु वेदान्त एवाद्वैतशास्त्रम्। इतराणि पञ्च भेदशास्त्राणि। एतत् षट्कं विना वेदबाह्यानि नास्तिक-शास्त्राणि।

## लोकायतशास्त्रम्

तानि शास्त्राणि कानीति चेत् बौद्धमार्हतं लोकायतिकं चेति त्रीणि। एतेषु त्रिषु लोकायतिकशास्त्रेण तु प्रतिपाद्यमानोऽर्थः- प्रत्यक्षमात्रं प्रमाणम्। प्रत्यक्षाः पृथिव्यप्तेजोवायवः सत्याः। एतेषां समुदायशरीरमेव आत्मा। देहवृद्ध्या ज्ञानवृद्धिः स्यात्

देहे क्षीणे ज्ञानं क्षीणं स्यादिति च। ईश्वर इति न कश्चित्। दृष्टे सुखदुःखे एव स्वर्गनरकौ। शरीरे नष्टेऽनष्टव्यं किमप्यदृष्टं नास्ति। अत एव शरीरं विनाऽऽत्मेति कश्चिदन्यो न भोक्तेति लोकायतिकशास्त्रप्रणेता बृहस्पतिः।

## बौद्धशास्त्रम्

बौद्धे तु प्रतिपाद्यमानोऽर्थः- पृथिवीतत्त्वमारभ्य बुद्धितत्त्वान्त-त्रयोविंशतितत्त्वानि सन्ति। एतेषु बुद्धितत्त्वं प्रधानम्। पाञ्च-भौतिके शरीरे बुद्धितत्त्वमेवात्मा भवति। तदेव प्रधानम्। एतद्बुद्धितत्त्वमारभ्यावार्ग् वस्तुराशिरखिलः क्षणिकः। अन्य-था स्थिर आत्मा च ईश्वरश्च इत्येतदुभयं नास्ति। एतच्छास्त्रोपदेष्टा सुगत एव। उपास्यमोक्षस्तु जलप्रवा-हवन्नित्यानुभूयमानज्ञानसन्ततिः। दुःखसुखस्पर्शं विना शुद्धचित्सन्ततिरेव स्यादिति केचित्। क्रमात् क्रमात् प्रवर्तमानो दीपः क्षीणयोस्तैलवत्र्योर्यथा नश्यति तथा ज्ञानसन्ततिनाश एव मोक्ष इति केचित्। एते सौत्रान्तिक-वैभाषिक-महायानिक-माध्यमिका इति चतुर्विधा भवन्ति। एतेषु केचित् प्रत्यक्षोऽखिलो वस्तुराशिरसत्यः ज्ञानसन्ततिरेव सत्येति। केचिदयमखिलो वस्तुराशिरस्ति अपि तु क्षणिक इति च।

## आर्हतशास्त्रम्

आर्हतैस्तु प्रतिपाद्यमानोऽर्थः- आर्हतशास्त्रप्रणेताऽर्हन्नत्रानादिसिद्धः। जीव इति कोऽपि पदार्थोऽनादिदोषसहितो वर्तते। अयं जीवः स्थूलदेहे क्षीणे क्षीणो वृद्धे वृद्ध इति च। अन्यानीन्द्रियाण्यपि सन्ति च।

एतत् सर्वं नाम हिंसाऽहिंसेति वा अस्ति नास्ति काय इति शब्देन वक्तव्यम्। आर्हदुक्तशास्त्रोक्तज्ञानेन चैतच्छास्त्रोक्ततप्तशिलाशयनादितपोभिश्च जीवानां हिंसादयो दोषाः क्षीयन्ते। एवमर्हन्निव क्षीणदोषो भवेदिति च। एतानि शास्त्राणि एते पदार्थाः सन्ति न सन्ति वेति पृच्छ्यमाने अस्ति च नास्ति च अस्ति नास्तीति च त्रिविधेन उच्यते इति च। एतत्त्रयं वेदबाह्यम्। ईश्वर इत्येकोऽनादिगतो न इति च। ते आचाररहिता नास्तिका उच्यन्ते।

## वैदिकशास्त्राणि षट्

वैदिकशास्त्राणि षट्। तेषामुत्पत्तिभूर् ऋग्यजुस्सामाथर्वाण इति वेदाश्चत्वारः। एतेषामङ्गानि छन्दो-विचिति-कल्प-शिक्षा-व्याकरण-निरुक्त-ज्योतींषीति षट्। मन्त्ररूपेण ब्राह्मणरूपेण विधिदोषरूपेण च ब्राह्मणादिवर्णधर्माणां ब्रह्मचर्याद्याश्रमधर्माणां प्रतिपादनं च उपनिषद्भागैः प्रकृतिपुरुषेश्वर-

प्रतिपादनं च वेदानां प्रमेयार्थाः। एवं वेदसिद्धाचारस्य प्रवर्तकाः शौचादिव्यवहारस्य प्रायश्चित्तस्य च नियामका मन्वादिधर्मशास्त्राण्यष्टादश। एतेषां प्रणेतारो मन्वादयो महर्षयः।

## पाञ्चरात्रशास्त्रम्

वासुदेवप्रणीतपाञ्चरात्रेण तु प्रतिपाद्यमानोऽर्थः- प्रोक्तचतुर्विंशतित्त्वगुणतत्त्वोपरि पञ्चविंशतितत्त्वं वासुदेव इत्याख्यम्। न किमपि परतत्त्वमेतस्मात् परतत्त्वात्। कृष्ण-अनिरुद्ध-मकरध्वज-रौहिणेया इति चत्वारो व्यूहा जगत्सृष्ट्यर्थमुत्पद्यन्ते। एतैश्चतुर्भिर्जडाजडात्मकं वस्तु समस्तं सृज्यत इति च। वेदान्तेषु परिणामवादिभि रुक्तवदखिलं वासुदेव इति च। वेदेषु पुरुषर्थों नास्ति पाञ्चरात्रेषु पुरुषर्थाः सन्ति। पाञ्चरात्रोक्तक्रमेण दीक्षयित्वा वासुदेवं समाराध्य वासुदेवस्वरूपे लयो मोक्ष इति च।

## इतिहासपुराणानि

इतिहासपुराणैस्तु प्रतिपाद्यमानोऽर्थः- वैदिकधर्माणां च सांख्यपातञ्जलप्रतिपाद्यार्थानां च पाञ्चरात्रपाशुपतशैवोक्तार्थानां च सृष्टिसंहारयोश्च वंशानां च मन्वन्तराणां च वंशानुचरितानां च प्रतिपादनं च। इतिहासो महाभारतम्। पुराणान्यष्टादश। एतेषां कर्ता वेदव्यासः। पञ्चविंशतितत्त्वमात्मेति पदार्थः। दीक्षया मुक्तो भवतीति च पुराणानां प्रमेयार्थाः।

## अतिमार्गत्रये पाशुपतशास्त्रम्

अतिमार्गत्रयमुच्यते। पाशुपतशास्त्रेण तु प्रतिपाद्यमानोऽर्थः- आत्मानो बहवो व्यापका नित्याः कार्यकारणसंयोगजातास्तु परस्परभिन्नाश्च। एतेषामाणवमलं नास्ति। मायामलेन कार्मपाशेन च सांसारिकाः सुखदुःखान्यनुभवन्ति। वैराग्योत्पत्तौ शास्त्रोक्तक्रमेण दीक्षिते परमेश्वरस्य ज्ञानगुणः संक्रान्तो भवति। पुत्रेषु कुटुम्बधुरं निधाय संन्यासवन्त इव आत्मसु ज्ञानं संक्रमय्य ईश्वरः स्वाधिकारादुपरतो भवति।

## महाव्रतशास्त्रम्

महाव्रतानां तु प्रतिपाद्यमानोऽर्थः- आणवमलेन सह पाशुपतोक्तप्रकारेणैव कार्ममायात्मकबन्धमुक्तानामात्मनां संसारदशायामपि ज्ञानशक्तिरेव न क्रियाशक्तिः। शास्त्रोक्तक्रमेण दीक्षिता अस्थिधारणादिशास्त्रोक्तचर्यानुष्ठातारो मुक्ता भवन्ति। ते च मुक्ताः केवलं ज्ञानशक्तिमन्त एव। ज्ञानशक्तिक्रियाशक्तिद्वयं तु परमेश्वरस्यैकस्यैवेति।

## कापालिकशास्त्रम्

कापालिकानां तु प्रतिपाद्यमानोऽर्थः- पाशुपतमहाव्रतोक्तक्रमेण आत्मलक्षणं बन्धलक्षणं चास्ति। शास्त्रोक्तक्रमेण दीक्षितेन दिने दिने श्यामैकध्वजपताकायां व्याप्तायां मनुष्यकपाले भिक्षामटित्वा भोक्तव्यमिति च महाव्रतानामिव मोक्ष इति च। पाशुपत-महाव्रत-कापालानां शास्त्राणाम् अतिमार्गाणां वक्तारो मायातत्त्वविद्यातत्त्ववासिनस्त्रयो रुद्राः।

## सिद्धान्तशास्त्राणि

अदृष्टशास्त्रभूतसिद्धान्तशास्त्रस्य इह लोके विश्वासजनकं परमेश्वरेण तत्पुरुषाघोरवामदेवसद्योजातनामभिश्चतुर्भिरधोवक्त्रैरनुगृहीतैर्विज्ञानकेवलैरेतदेव तत्संज्ञैश्चतुर्भिरुक्तानि गारुड-दक्षिण-वाम-भूतानीत्यधःस्त्रोतांसि चत्वारि शास्त्राणि। एतेषां गारुडतन्त्रेण तत्पुरुषं ब्रह्म स्वरूपवद् ध्यात्वा पूजनीयम् इत्युच्यते। अनेन शास्त्रेण तु प्रत्यक्षं सर्पचिकित्सार्थं मन्त्रौ-षधविषयाणि चोक्तानि। दक्षिणतन्त्रेषु अघोरं ब्रह्म स्वरूपवद् ध्यात्वा पूजनीयः परमेश्वर इति च योगेन परमेश्वरः प्रत्यक्षी-कार्य इति चोक्तम्। शत्रुजयाय मन्त्रयोगश्च। वामतन्त्रेण वामदेवो ब्रह्मस्वरूपवद् ध्यात्वा पूजनीयः। अनेन शास्त्रेण रसवादाद्युक्तम्। भूततन्त्रेण सद्योजातं ब्रह्म-स्वरूपवद् ध्यात्वा परमेश्वरः पूजनीय इत्युक्तम्। भूत-प्रेत-पिशाच-चिकित्सार्थं मन्त्रौषधानि च। शक्तितत्त्ववासिना केनचिदात्मना शाक्तं तन्त्रमुक्तम्। भास्करीयवेदान्तवादि-प्रोक्तवज्जडाजडमखिलं शक्तिपरिणतिरित्युक्ततन्त्रस्याभि मतम्। तान्यधःस्त्रोतांसि चत्वारि च साक्षात् शिवप्रणीतानि भवन्ति।

कौलयामलादिशास्त्राणि मनुष्यैर्मत्स्येन्द्रनाथादिसिद्धैरुक्तानि।

## शास्त्रतारतम्यम्

लोकायतज्ञानिनां पृथिव्यप्तेजोवायूनां चतुर्णां भूतानां ज्ञानेन तत्तद्वार्क्प्रपञ्चजननं विरमति। आर्हतानां गुणतत्त्वाद् अर्वाक् तत्त्वाज्जन्म विरमति। न्यायवैशेषिकयोर्बुद्धितत्त्वान्तसंसारो विरमति। बौद्धानां बुद्धितत्त्वादर्वाक्तत्त्वाज्जन्म विरमति। सांख्यानां प्रकृतिपुरुषयोर्विवेकज्ञानेन सत्त्वप्रकृतेरुपरि मिश्राध्वविषयस्य तत्त्वज्ञानस्य असंभवादशेषकर्मनाशानुत्पत्तेर्विज्ञानकैवल्यं नास्ति। पाञ्चरात्राणां प्रकृतेरर्वाक् संसारो विरमति। वेदान्तिनां पुरुषतत्त्वप्राप्तिः स्यात्। पौराणिकानां रागतत्त्वप्राप्तिः स्यात्। कापालिकानां कलातत्त्वप्राप्तिः स्यात्। पाशुपतानां मायातत्त्वप्राप्तिः स्यात्। महाव्रतिनां विद्यातत्त्वप्राप्तिः स्यात्। स्रोतोऽन्तरगारुड-दक्षिण-वाम-भूततन्त्रेषु दीक्षितानां शक्तितत्त्वस्थितनिवृत्ति-प्रतिष्ठा-विद्या-शान्तिभुवनप्राप्तिः स्यात्। शुद्धशाक्तानां शक्तितत्वप्राप्तिः स्यात्। कौलयामलादिशास्त्राणां हिंसामैथुनसङ्गमस्य सम्भवात् पिशाचादिपदप्राप्तिः स्यात्।

## द्विविधं सिद्धान्तशास्त्रम्

सिद्धान्तशास्त्रं तु शिवभेदेन रुद्रभेदेन च द्विविधम्। शिवभेदं तु बिन्दुशक्तेर्नादबिन्दुप्रणवात्मतया परिणमते। तदनन्तरं मातृका चानुष्टुप्छन्दोनिबद्धप्रणवादीनां मायोक्तविधौ विज्ञान-कलाख्यानां परमेश्वरेणानुगृहीतानां दशशिवानां कामिकादिकं ज्ञानं शब्दात्मकं सद्योजातवामदेवमुखाभ्यां प्रोक्तानि शैवानि शास्त्राणि दश च। एवं परमेश्वरोपदिष्टज्ञानानाम् अष्टादश-रुद्राणामघोरतत्पुरुषेशानमुखैः श्रीविजयादिसंज्ञया प्रोक्तानि रुद्रभेदानीत्यष्टादशशास्त्राणि च। एवमष्टाविंशति-शास्त्राणामेकैककोटिसंख्यया अष्टाविंशतिकोटिग्रन्थाः।

## ज्ञानपादविषयाः

एतानि प्रत्येकं ज्ञान-क्रिया-योग-चर्याभिश्चतुष्पादानि। एतेषां ज्ञानपादेन तु परमेश्वरस्य स्वरूपं च विज्ञानाकल-प्रलयाकल-सकलानामात्मनां स्वरूपं च आणव-कार्म-माया-बैन्दव-रोधशक्त्यात्मकपाशस्वरूपं च शक्तिस्वरूपं च शिवतत्त्वमारभ्य पृथ्वीतत्त्वान्तषट्त्रिंशत्तत्त्वानां सृष्टिप्रकारश्च एतैरात्मनां भोगसाधनैर्भावितव्यं च भुवनानां भुवनेश्वराणां स्वरूपं च भुवनानां योजनान्येतावन्ति परिमाणानि च अधःप्रलय-मध्यप्रलय-महाप्रलयानां स्वरूपं च तत्प्रलया-

नन्तरं सृष्टेः प्रकारश्च पाशुपत-महाव्रत-कापालवचनं च तत्त्वं च प्रोक्तार्थं पूर्वपक्षीकृत्य प्रमेयनियमश्च प्रोच्यन्ते।

## क्रियापादविषयाः

क्रियापादेन तु मन्त्रोद्धार-सन्ध्यावन्दन-पूजन-जप-होमाश्च समयविशेषनिर्वाणसंस्कार आचार्याभिषेकात्मनाऽऽत्मनां भोगमोक्षोपायभूता दीक्षा च प्रोच्यन्ते।

## योगपादविषयाः

योगपादेन त्वेतानि षट्त्रिंशत्तत्त्वानि च तत्त्वेश्वराश्च आत्मा च परमेश्वरश्च शक्तिश्च जगत्कारणभूतमायामहामाययोः प्रत्यक्षप्रभावश्च विषयतत्त्वसिद्ध्यपेक्षाणाम् अणिमादिसिद्धीनां संभवश्च प्राणायाम-प्रत्याहार-ध्यान-धारणा-जप-समाधिप्रकारश्च मूलाधाराद्याधाराणामवस्थानं च प्रोच्यन्ते।

## चर्यापादविषयाः

चर्यापादेन तु प्रायश्चित्त-पवित्रारोपणप्रतिपादनं च शिवलिङ्ग-लक्षणं च उमामहेश्वरादिव्यक्तलिङ्गलक्षणं च स्कन्दनन्द्यादि-गणेश्वरलक्षणं च जपमाला-योगपट्ट-दण्ड-कमण्डल्वादि-लक्षणं च अन्त्येष्टिश्राद्धानि च प्रोच्यन्ते।

## विविधपदप्राप्तिः

समयसंस्कारेण तु रुद्रपदप्राप्तिः स्यात्। विशेषसंस्कारेण तु ईश्वरपदप्राप्तिः स्यात्। अत्र रुद्रपदप्राप्तिर्नाम गुणमस्तकस्थ-रुद्रस्य पदप्राप्तिरेव। ईश्वरपदप्राप्तिर्नाम प्रकृतितत्त्वादुपरि मिश्राध्वनि प्रथमतत्त्वभूतरागतत्वप्राप्तिरेव। ईश्वरेणानन्तेश्वरे-णाधिष्ठितत्वात् तत्तत्त्वप्राप्तिरीश्वरपदप्राप्तिः स्यात्। सांख्य-पातञ्जल-वेदान्त-पाञ्चरात्रोक्तमार्गादुपरि निर्वाणदीक्षया परमेश्वरसाम्यरूपं मोक्षं प्राप्नुवन्ति।

## विविधा दीक्षाः

अथ निर्वाणदीक्षाक्रिया सद्योनिर्वाणाऽसद्योनिर्वाणभेदेन द्विविधा। तत्र सद्योनिर्वाणदीक्षाक्रियायाः समनन्तरकालमेव शरीरं विहाय मोक्षं प्राप्नुवन्ति। असद्योनिर्वाणदीक्षया दीक्षा-काले भूतानि भविष्यन्ति च कर्माणि संशोध्य तदानीं भुज्यमानस्य शरीरहेतुभूतस्य वर्तमानकर्मणः शुद्धिकरणाद् आयुःक्षये शरीरत्यागेन मोक्षं प्राप्नुवन्ति। साधकदीक्षया शिव-भक्तिशिवलिङ्गार्चनयोः सतोरपि पश्चाद् विद्येश्वरादिपदाभि-लाषिणः तत्पदं प्राप्नुवन्ति। तत्पदस्थानां मध्ये विरक्तास्त-

दानीम् एव मुक्ता भवन्ति। नो चेत् महासंहारकाले मुक्ता भवन्ति। निर्बीजदीक्षा तु तद्दीक्षोत्तरकालेऽनुष्ठेयानां सन्ध्यावन्दनशिवलिङ्गार्चनादीनां दीक्षाकाल एवाचार्येण संशोध्यानुष्ठितत्वात् स्त्रीबालवृद्धव्याधिभोगरताज्ञानां विधेया। सबीजदीक्षा तु समर्थानां समयिपुत्रकसाधकाचार्याणां विधेया। तद्दीक्षया भूतभविष्यद्रूपाणि द्विविधानि कर्माणि च एतत्परिपाकप्राप्तान्यशेषशरीराणि च शरीराभावेन भोगाश्च विनश्यन्ति। शरीरकारणभूतानां कर्मणां शुद्धिकारकशरीराणि सुखदुःखान्यनुभवितव्यान्येव। इत्थं त्रिविधानि कर्माणि विनश्यन्ति।

## दीक्षोत्तरं पालनीया नियमाः

इत्थं त्रिविधे कर्मणि विनश्यति सति दीक्षाया उपरि मरणान्तमुच्यमानशास्त्रीयनियमैरैहिकवर्तमानशरीरकारणभूतस्य कर्मणः सहकारिमलाशुद्धेर्ज्ञानानि योगाश्च तपांसि च बुद्ध्यादिसाधनैः साध्यानीत्युक्तत्वादिह न मोक्षः किन्तु परमेश्वरप्रसादात्मिकया दीक्षयैव मोक्षः इतरैर्नास्ति। दीक्षोत्तरकाले आचारवैकल्ये बुद्धिपूर्वस्य दोषस्य प्रायश्चित्तेन

शुद्धिः स्यात् मन्त्रद्रव्यलोपयोश्च पवित्रारोपणेन शुद्धिः। अबुद्धिपूर्वस्य नियमलोपस्यान्त्येष्टिक्रियया शुद्धिः।

## विधिनिषेधौ

दीक्षोत्तरकालेऽवश्यानुष्ठेयानि कर्माणि यमनियमसम्पत्तिः सन्ध्यावन्दनम् शिवलिङ्गार्चनम् अग्निकार्यम् गुरुवचनपालनम् यथाशक्ति माहेश्वरपूजादिकं चानुष्ठेयानि। अननुष्ठेयानि कर्माणि निर्माल्यभक्षणं च शिवनिन्दा गुरुनिन्दा शिव-शास्त्रप्राप्ताचारनिन्दा च देवद्रव्याद्युपभोगश्च भूतहिंसादिकं च।

## मुक्तात्मनो लक्षणम्

एवं दीक्षितस्य तस्य उक्तानुष्ठानवतो मुक्तस्यात्मनो लक्षणमाणवकार्ममायीयबैन्दवरोधशक्त्याख्यपाशपञ्चकात् विमुक्तिश्च परमेश्वरवत् सर्वज्ञता-सर्वकर्तृता-नित्यतृप्तता-अनादिसिद्धस्वतन्त्रता-अलुप्तशक्तिता-अनन्तशक्तिमत्ता चेति षाड्गुण्यस्वरूपप्राप्तिश्च भवति। एवंविधानां प्राप्तात्मनां

परमेश्वरवत् सृष्ट्यादिपञ्चकृत्यं नास्ति विषयासद्भावश्च । राग-द्वेषादीनामविद्यमानतया च सृष्ट्यन्तरे कर्तृतायामकरणम् । पञ्चविधकृत्येन तु परमेश्वर एव परानुग्रहं करोति ।

इति सर्वमतेष्विष्टा सा सिद्धान्तप्रकाशिका ।
सर्वात्मशम्भुना व्यक्ता कल्पिता शैवसम्मता ॥

समाप्तश्चायं ग्रन्थः ॥

# ஸித்தாந்தப் பிரகாசிகை

அகரம் என்னும் எழுத்தைத் தன் உடலாகக் கொண்டவரும், உருவமும் பெயரும் அற்றவரும், அகரம் முதல் க்ஷகரம் ஈறான (ஐம்பத்தோரு எழுத்துக்களின்) உண்மையை விளக்குபவருமான தேவனாகிய [சிவபெருமானை] வணங்கிப் போற்றிச் சரணடைகிறேன். (1)

அசைவற்ற ஜடப்பொருள்களையும் சலனமுடைய ஜீவராசிகளையும் கொண்டதாகிய இந்தப் பரந்த உலகமானது எந்தப் பரம்பொருளால் பசு மற்றும் பாசவடிவமாக முழுதும் நன்கு வியாபிக்கப்பட்டுள்ளதோ திரிபுரங்களையும் அழித்ததான அந்தக் கடவுளுக்கு என் வணக்கங்கள் [உரித்தாகுக]. (2)

## உடலும் ஆன்மாவும்

இந்த ஸம்ஸாரத்தில் ஜாதி மற்றும் குலம் முதலிய உணர்வுகளுக்கிருப்பிடமாகிய இந்தப் பருவுடலானது நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் [ஐம்பூதங்களின்] பிரிக்க முடியாத

சேர்க்கை. இங்கு முற்பிறவிகளில் செய்த புண்ணிய பாவங்களுக்கேற்ப பிராமண முதலிய வருணங்களில் பிறப்பும், புலன்களின் செயல்பாடும், அழகும், செல்வமும் பொருந்தி குறிப்பிட்ட ஓர் அளவு ஆயுளும், குறிப்பிட்ட ஓர் அளவு இன்பதுன்ப நுகர்ச்சியும் கொண்டதாக ஆன்மா அமைகிறது. இவ்வான்மாக்கள் இன்பதுன்ப நுகர்ச்சியடையும் பொருட்டு ஒவ்வொரு சிருஷ்டியிலும் ஒவ்வொரு ஆன்மாவும் ஒரு புல்நுனியை விட்டு மற்றொன்றைப் பற்றிக் கொள்ளும் கம்பளிப் பூச்சியைப் போல் முந்தைய பருவுடலை விட்டு நீங்கி அந்தந்தப் பருவுடலைப் பற்றுவதும் பூதங்கள் முதல் கலாதத்துவம் ஈறான முப்பது தத்துவங்களடங்கியதுமான [சூக்ஷ்ம சரீரத்தைப்] பிரத்தியேகமாக ஒவ்வொரு பிறவியிலும் பெறுகின்றன. அந்த ஆன்மாவினால் செய்யப்படும் புண்ணியபாவங்களுக்கெல்லாம் [இந்த சூக்கும சரீரம் தான்] உறைவிடமாகும். ஆன்மாவானது பருவுடல், சூக்குமசரீரம் ஆகியவற்றினின்றும் தனித்து வேறுபட்டது; அறிவு மற்றும் செயல் திறன் கொண்டது; என்றும் நிலைத்து நிற்பது; உருவமற்றது; எங்கும் வியாபித்திருப்பது. ஸம்ஸாரத்தில் உழலும் புருஷதத்துவமானது ஆணவம், கர்மம், மாயை, பிந்து மற்றும் ரோதசக்தி என்னும் ஐவகைப் பாசங்களுக்குட்பட்டது.

## பத்து காரியங்கள்

இந்தப் புருஷதத்துவமான ஆன்மாவிற்குச் சுகதுக்கங்களை அனுபவிப்பதற்குச் சாதனமாகத் திகழும் தத்துவங்கள் எவையெனில், முன்பு கூறிய நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பூதங்கள்; இவற்றிற்குக் காரணமான ஐந்து தன்மாத்திரைகள் யாவை எனில், கந்தம், இரசம், ரூபம், பரிசம், மற்றும் சப்த தன்மாத்திரைகளாம்.

## பத்து கரணங்கள்

வாக்கு, பாதம், கை, கழிவாய் மற்றும் கருவாய் ஆகியவை ஐந்து தொழிற் புலன்கள் (கன்மேந்திரியங்கள்). இவற்றின் தொழில்களாவன: பேசுதல், நடத்தல், எடுத்தல், கழிவகற்றுதல், ஆனந்தம் அடைதல். செவி, தோல், கண், நாக்கு, மூக்கு ஆகியவை ஐந்து அறிவுப் புலன்கள் (ஞானேந்திரியங்கள்). இவற்றின் தொழில்களாவன: ஒலி, தொடு உணர்ச்சி, உருவம், சுவை, நாற்றம் ஆகியவற்றை அறிதல். வாக்கு முதலிய கன்மேந்திரியங்கள் ஐந்தும் செவி முதலிய ஞானேந்திரியங்கள் ஐந்தும் சேர்ந்து கரணங்கள்-புருஷதத்துவமான ஆன்மாவின் அறிவுக்கும் தொழிற்படுவதற்கும் துணை புரியும் கருவிகளாகத்-திகழ்கின்றன.

## மூன்று அந்தக்கரணங்கள்

மனம், அஹங்காரம், புத்தி ஆகிய மூன்றும் இப்பருவுடலினின்றும் வெளியில் சென்று அறிந்து கொள்ளும் செவி முதலிய ஞானேந்திரியங்களைப் போலல்லாமல் எல்லாத் தொழிலுக்கும் இருப்பிடமான இவ்வுடலின் உள்ளே நின்று [இந்திரியங்களைத்] அவ்வவற்றின் தொழிலைச் செய்யுமாறு தூண்டு கின்றன. ஆகையால் இவை அந்தக்கரணம் - உட்கருவி என அழைக்கப்படுகின்றன. இம்மூன்ற னுள் மனதின் செயலானது [யாதேனும் ஒன்றை அறியுமாறோ அல்லது ஒரு செயலைச் செய்யுமாறோ] விழைதல் மற்றும் செவி முதலிய ஞானேந்திரி யங்களைத் தொழிற்படுத்துதல்; நான் என்னும் உணர்வு மற்றும் பிராணவாயு முதலியவற்றைத் தொழிற்படுத்துதல் அஹங்காரத்தின் செயல்; ஐயந்திரிபற ஒரு செய்தியை அறிவது புத்தியின் செயல். அது எவ்வாறெனில், எடுத்துக்காட்டாக, இது வெள்ளியே சிப்பியல்ல என உறுதியாக அறிவது. இவ்வாறாக [பத்து காரியங்கள், பத்து கருவிகள், மூன்று உட்கருவிகள் அடங்கிய] இருபத்திமூன்று தத்துவங்கள் கூறப்பட்டன.

## அஹங்காரசிருஷ்டி

இம்மூன்றனுள் ஐயந்திரிபற அறிவதற்குக் காரணமான புத்திதத்துவத்தினின்றும் சாத்துவிகம், இராஜஸம், தாமஸம் என [மூன்று] வகைப்பட்ட அஹங்காரம் தோன்றுகிறது. சாத்துவிக அஹங்காரத் தினின்றும் மனம், செவி முதலிய ஐந்து அறிவுப் புலன்கள் தோன்றும்; இராஜஸ அஹங்காரத் தினின்றும் வாக்கு முத லிய ஐந்து தொழிற் கருவிகள் தோன்றும்; தாமஸ அஹங்காரத்தினின்றும் நாற்றம் முதலிய ஐந்து தன்மாத்திரைகள் உண்டாகும். இவ் வைந்து தன்மாத்திரைகளிலிருந்து மண் முதலிய ஐம்பூதங்கள் தோன்றுகின்றன. இவ்வைந்து பூதங் களின் செயல்கள் முறையே எல்லா வற்றையும் தாங்குதல், ஒருசேரவைத்திருத்தல், எரித்தல், பொருள்களின் உறுப்புகளோடு ஒரு சேர இணைத் திருப்பது, எல்லாப் பொருள் களுக்கும் இருப்பிடம் அளித்தல் ஆகியன.

## குணங்களின் வகை

ஒலி, தொடு உணர்ச்சி, வண்ணம், சுவை ஆகியன நிலத்தின் பொதுக் குணங்கள்; நாற்றம் அதன் சிறப்புக் குணம். ஒலி, தொடு உணர்ச்சி, வண்ணம் ஆகியன நீரின் பொதுக் குணங்கள்; சுவை சிறப்புக் குணம். ஒலி, தொடு உணர்ச்சி இவையிரண்டும் நெருப்பின் பொதுக் குணங்கள்; வண்ணம் சிறப்புக் குணம். ஒலியானது காற்றின் பொதுக் குணம்; தொடு உணர்ச்சி சிறப்புக் குணம். ஆகாயத்திற்கு ஒலி ஒன்றுமட்டும் தான் குணம். அவ்வொலி யானது எதிரொலி மட்டுமே; உச்சரிக்கப்படும் எழுத்துக்களின் ஒலியல்ல.

## குணதத்துவம்

இருபத்திரண்டு தத்துவங்களுக்கு அப்பாற்பட்டு விளங்கும் புத்திதத்துவத்திற்குக் காரணமான குண தத்துவமானது ஸத்துவம், இரஜஸம், தாமஸம் என மூன்று பகுப்புக்களைக் கொண்டது; [இது] சுகம், துக்கம், குழப்பம் முதலிய வற்றிற்குக் காரணமாக உள்ளது. [இது] இருபத்திநான்காவது தத்துவம். குணதத்துவத்திற்குக் காரணமாக விளங்கும்

பிரகிருதி தத்துவமானது இருபத்தியைந்தாவது தத்துவம். புத்தி, குணம் ஆகியற்றில் பிரகிருதியின் காரியமாகக் கொள்ளப்படுவது குணதத்துவமே. இக் குணதத்துவமானது சுகம், துக்கம், மன மயக்கம் முதலியவற்றிற்குக் காரணமாகவும், அதற்குக் கீழுள்ள புத்தி முதல் நிலம் ஈறாகவுள்ள இருபத்தி மூன்று தத்துவங்களுக்கும் காரணமாகவும் விளங்கு கிறது. இவ்வாறான இருபத்தியைந்து தத்துவங்களும் அசுத்தாத் துவா என வழங்கப்படுகின்றன.

## மிசிராத்துவா

[இவ்விருபத்தியைந்து தத்துவங்களுக்கும்] மேலாக உள்ளது ராகம் என்னும் தத்துவம்; இதன் தொழிலாவது பிரகிருதியினின்றும் தோன்றும் அனைத்துப் பொருள்கள் மீதும் ஆன்மாவிற்கு விருப்பம் உண்டாக்குவது. [ராகதத்துவத்திற்கும்] மேலாக இருப்பது நியதி தத்துவம்; அந்தந்த ஆன்மாவினால் செய்யப்படும் செயல்களின் பலனை அந்தந்த ஆன்மாவே நுகரவேண்டும் என்று நெறிப் படுத்துவதே இதன் தொழில். இதற்கு மேல் கால தத்துவம்; புருஷன் என அழைக்கப்படும் ஆன்மா வானது மிக நீண்டகாலம் அனுபவிக்கிறது அல்லது குறைந்த காலம் அனுபவிக்கிறது எனப் புருஷ தத்துவத்தின் போக நுகர்ச்சியை அளவிடுவது இதன்

தொழில். இதற்கு மேல் வித்தியா தத்துவம்; இதன் தொழிலாவது அந்தந்தப் பொருள்களின் உருவத்தைக் கொள்ளும் புத்தியினை ஆன்மா பற்றும்படி செய்வது. இதற்கு மேல் உள்ளது கலாதத்துவம்; இதன் தொழில் தாமிரத்தில் படியும் களிம்பு போல் ஆன்மாவின் இயல்பான ஞானசக்தியினை முழுவதும் மறைத்து நிற்கும் ஸஹஜமல மென்றழைக்கப்படும் ஆணவமலத்தைச் சிறிது விலக்கி ஆன்மாவின் உண்மைச் சொரூபம் சிறிது வெளிப்படும்படி செய்தல். இக்கலா தத்துவத்திற்குக் காரணமாயிருப்பது மாயாதத்துவம். மேற்கூறிய தத்துவங்களின் வரிசை: மாயா தத்துவத்தில் கலா, வித்தியா, காலம், நியதி, அராகம் ஆகிய ஐந்தும் அடங்கும்; இவற்றினால் மறைக்கப்பட்டு [சுகதுக்கங்களை] அனுபவிக்கும் ஆன்மாவிற்கு புமான் என்றும், மலமறைப்புள்ளதால் புருஷ தத்துவமென்றும் வழக்கு. [ஆனால்] ஆன்மா ஜடப்பொருளன்று. அராகம் முதல் கலாதத்துவமீறாக உள்ள ஐந்தும் மிசிராத்துவா என அழைக்கப்படுவன.

## சூக்கும தேகம்

இவ்வாறு மேற்கூறப்பட்ட முப்பத்தியோரு தத்துவங்கள் அடங்கியது சூக்ஷ்மதேகம் என வழங்கப்படுகிறது; இது ஒவ்வொரு ஆன்மாவிற்கும் தனித்தனியே வேறுபட்டது. இம்முப்பது தத்துவங்கள் பற்பல புவனங்களில் உண்டாகும் உடல்களுக்கும் அவற்றிற்கு ஆதாரமாக விளங்கும் பற்பல புவனங் களுக்கும் ஆதாரமாக அமைவது; இவை எல்லா ஆன்மாக்களுக்கும் பொதுவானவை. இவை எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பது அசுத்தமாயை; இது அழிவற்று எக்காலமும் இருப்பது; எங்கும் வியாபித்திருப்பது; எல்லா ஆன்மாக்களின் கருமங்க ளுடனும் தொடர்புடையது; ஆன்மாக்களின் ஞானம் மற்றும் கிரியை ஆகியவற்றைப் பிரகாசிப்பதாயினும் தன்னுடைய தொழிலால் ஆன்மாக்களை மோஹ மடையச் செய்கிறது

## சுத்ததத்துவங்கள்

இதற்கு மேல் முப்பத்திரண்டாவது தத்துவம் சுத்தவித்தியை எனப்படும்; அதற்கு மேல் ஈசு வரதத்துவம் முப்பத்திமூன்றாவது. இந்த சுத்த வித்தியை தத்துவத்தில் ஸப்தகோடி மஹாமந்தி ரங்கள், காமிகம் முதலான இருபத்தெட்டு ஆக

மங்கள் (= ஸம்ஹிதைகள்) சைவஸித்தாந்த சாத்திரங்களினால் போற்றி வணங்கப்படும் நந்தி முதலான எட்டு கணேசுவரர்கள், இந்திரன் முதலான எட்டு லோகபாலகர்கள், அவர்களுடைய ஆயுதங் களான வஜ்ரம் முதலானவை இருக்கின்றன. ஈசுவரதத்துவத்தில் அனந்தர் முதலான வித்தியேசுவ ரர்கள் இருக்கின்றனர்.

## வித்தியேசுவரதத்துவம்

இவர்களில் அனந்தர் என்னும் வித்தியேசுவரர் ஸர்வேசுவரரானதால் மற்றைய வித்தியேசுவரர் களுக்கும் சுத்தவித்தியா தத்துவத்தில் அடங்கியவர் களுக்கும் (இவர்) ஈசுவரர்; மாயையைக் கலக்கு பவர்; மாயாதத்துவத்திலுள்ள புவனங்களைப் படைப்பவர். ஆனால் இவர் எல்லாவற்றிற்கும் தலைவரான பரமேசுவரரினின்றும் வேறானவர்; அதிகாரமலம் பக்குவ மடைந்ததால் அந்தப் பரமேசுவரரால் அருளப்பட்டவர். இந்த சிருஷ்டிக் கிரமத்தில் ஆணவமலம் கருமமலமென்னும் இரு பாசங்களால் கட்டுண்டவர்கள் பிரளயாகல ரென்றழைக்கப்படுவர்; இவர்களுள் மலபரிபாக மடைந்தவர்களின் மீது பரமேசுவரரின் அருட்கண்

பார்வை வீழ்ச்சியினால் அருளப்பட்ட நூற்றிப் பதினெட்டு உருத்திரர்கள் அடங்குவர். இவர்களுள் ஒருவரான ஸ்ரீகண்டருத்திரர் மத்திமப் பிரளயத்தின் இறுதியில் பிரகிருதிதத்துவத்தின் மேலமைந்த புவனங்களையெல்லாம் தோற்றுவிப்பவர். ஆணவம், கருமம், மாயை ஆகிய மும்மலங்களுடன் கூடிய சகலர்களுள் ஞானம், யோகம், தவம், தியானம் முதலியவற்றை அநுஷ்டிப்பதால் அடையப்படும் பிரஹ்மா, விஷ்ணு ஆகியோரின் பதவிகளையும் நிர்வகிப்பவர்; மத்திமப் பிரளயத்தில் இவர் ராக தத்துவத்தில் அடங்குவார். பின்பு சிருஷ்டிகாலத்தில் அசுத்தாத்துவசிருஷ்டியைச் செய்து அதன் பின்பு [மேற்கூறிய] பிரஹ்மா விஷ்ணு ஆகியோர்களின் சிருஷ்டிக்கும் காரணமாக விளங்குகிறார்; அவர்களுக்குக் கீழுள்ள புவனேசுவரர்கள், முப்பத்து முக்கோடி தேவர்கள், ஈசுவரர்கள் ஆகியோரின் பிரஹ்மாண்டங்களையும் சிருஷ்டி செய்கிறார். அந்தப் பிரஹ்மாண்டத்தில் சகலர்கள் வாழும் பதினான்கு உலகங்கள் அடங்கும்.

## 118 உருத்திரர்கள்

முன்பு கூறிய உருத்திரர்களில் நூற்றுவர் ஐம் பூதங்களாலான இந்தப் பிரஹ்மாண்டங்களைக் காப்பவர்கள்; பிரஹ்மவிஷ்ணுக்களுடன் கூடி குணதத்துவத்திலுள்ள உருத்திரபட்டாரகரானவர் [ஸ்ரீகண்டருத்திரர் என அழைக்கப்படுபவர்] மத்திமப் பிரளயம் வரை அதிகாரம் செலுத்தி இந்தப் பிரஹ்மாண்டத்துக்கதிபர்களான பிரஹ்மா விஷ்ணு இருவரையும் சங்கரித்து மிசிராத்துவாவிலுள்ள ராகதத்துவத்தில் அடங்குவர். அவருடன் கூட வீரபத்திரரும் இருப்பர்; இவ்வாறாகப், பிரகிருதியின் தொடக்கத்தில் எட்டு [உருத்திரர்களும்], கலாதத்து வத்தின் தொடக்கத்தில் எட்டு [உருத்திரர்களும்], மேற்கூறிய ஸ்ரீகண்டருத்திரர் வீரபத்திரர் ஆகிய இரு வரும் முன்பு கூறிய நூறு [உருத்திரர்களும்] சேர்ந்து நூற்றிப் பதினெட்டு உருத்திரர்களாவர். இவர்கள் பரமேசுவரனான சிவபெருமானால் அருளப்பட்ட வர்கள்; உடல் படைத்தவர்களாயினும் பிரஹ்ம விஷ்ணுக்களைப் போல் அஞ்ஞானத்திற்குட்பட்டவர் களல்லர்; தங்களுடைய ஞானயோகவலிமை யினாலேயே அந்தப் பிரஹ்மவிஷ்ணுக்களின் பதவியை

அடையவல்லவர்கள். மலபரிபாகத்தினாலும் பரமேசுவரரின் அருட்கண் வீழ்ச்சியினாலும் தீக்ஷையைப் பெற்று இவர்கள் இப்படிப்பட்டப் பதவிகளை அடைந்தவர்கள். சுத்தவித்தியாதத் துவத்திலிருப்பவர்களுக்கும் அவ்வாறே மலபரி பாகத்தினாலும் பரமேசுவரரின் அருட்கண் வீழ்ச்சி யினாலும் அந்தப் பதவி கிட்டுகிறது. வித்தியேசு வரர்களுக்கும் சுத்தவித்தியா தத்துவத்திலிருப்பவர் களுக்கும் உடலானது பிந்துவினால் ஆனது. மேற் கூறிய உருத்திரர்களுக்கு உடலானது மாயையினால் செய்யப்பட்டது. பிரஹ்மவிஷ்ணுக்களின் உடலானது பிரகிருதியினால் செய்யப்பட்டது. பூஜை முதலிய வழி பாட்டுச் சடங்குகளில் பரமேசுவரரின் சொரூபம் முதலியன இந்நூற்றிப்பதினெட்டு உருத்திரர்களைப் போலவும் வித்தியேசுவரர்களைப் போலவும் தியானிக் கத்தக்கது; பிரஹ்ம விஷ்ணுக்களின் உடலானது பிரகிருதியினால் செய்யப்பட்டதாலும், அவர்களுக் குப் பரமேசுவரரின் அருட்கண் வீழ்ச்சி முதலில் இல்லாததாலும் அவர்களுடைய உருவம் மற்றும்

சொரூபங்களைப் போல் பரமேசுவரர் தியானிக்கத் தக்கவரல்லர். [ஏனெனில்] பிரஹ்மவிஷ்ணுக்களின் பதவியானது பசுபூமியாகும்; [மாறாக] உருத்திர பதவியானது பதிபூமியாகும்.

### அதிகார-போக-லயதத்துவங்கள்

இவ்வாறு விளங்கும் ஈசுவரதத்துவத்திற்கு மேல் இருப்பது ஸதாசிவதத்துவம்; அதற்கும் மேல் சக்திதத்துவம்; சிவதத்துவம் அதற்கு மேல் இருப்பது. இம்மூன்றும் பரமேசுவரரின் அதிகார-போக-லயதத்துவங்களுக்குப் பெயர்களாகத் திகழ்பவை. இம்மூன்றனுள் பரமேசுவரரைத் தவிர கருத்தாவாகத் திகழும் வேறு எந்த ஆன்மாவும் இடம் பெறாது. ஸாதக தீக்ஷை செய்யப்பட்டவர்களும் மந்திர சாதனையை மேற்கொள்ளுபவர்களும் [பக்தி] சிரத்தை மேலீட்டால் பரமேசுவரருடைய அருட்சக்தி யினால் இந்த அதிகார-போக-லயதத்துவங்களை அடைந்து [அங்கு] போகங்களை அனுபவித்துப் பின் அதனின்றும் வைராக்கியத்தை அடைந்தோ அல்லது மஹாஸம்ஹாரம் வரையிலோ அங்கிருந்து அதன் பிறகு வித்தியேசுவரர்களுடன் தாங்களும் பர முக்தியடைகின்றனர்.

வித்தியாதத்துவத்தில் அகாரம் முதல் க்ஷகாரம் ஈறான ஐம்பத்தோரு எழுத்துக்களும், காமிகம் முதலான இருபத்தெட்டு ஆகமங்களும் வைகரீ வடிவில் விளங்குகின்றன; ஈசுவரதத்துவத்தில் பிரணவமும், ஸதாசிவதத்துவத்தில் ஸகளமான பிந்துவும், ஸகளமான நாதமும், சக்தி தத்துவத்தில் ஒவ்வொரு ஆன்மாவுக்கும் தனித்தனியே வேறுபடும் சூக்ஷ்மம் எனப்படும் புத்தியின் பீஜமானது சூக்ஷ்ம நாதவடிவிலும், சிவதத்துவத்தில் காரணபிந்துவும் காணப்படுகின்றன. பிந்துவுக்கும் சிவதத்துவத் திற்கும் அடிப்படைத் தன்மையில் வேறுபாடு எதுவும் இல்லை; சிவதத்துவத்தை அதிட்டித்து நிற்கும் ஸதாசிவருக்கு சக்தி, ஸகலர், ஸகலாஸகலர், நிஷ்கலர், வியக்தாவியக்தத்தின் ஆன்மா, வியக்தமஹேசுவரர், வியக்தாவியக்தஸதாசிவர், நிஷ்களசிவர் எனப்பல பெயர்கள் உண்டு.

### பிந்துவின் தன்மை

இந்த முப்பத்தாறுதத்துவங்களுள் பிந்துவானது அழிவற்று என்றுமிருப்பது (நித்தியப் பொருள்); வியாபகமானது; உருவமற்றது; பரமேசுவரரால் என்றும் அதிட்டிக்கப்படுவது; சொல், பொருள் எனப்பலவகைப்பட்டு நிற்கும் நாதம் முதலியவற்றின்

மூலம் ஆன்மாக்களுக்கு உண்மையான ஞானம் தோன்றுவதற்குக் காரணமாயிருப்பது; [ஆன்மாக் களை] மனமயக்கம் அடையாமலிருக்கச் செய்வது; மாயையின் காரியங்களைத் தவிர மற்றவற்றிற்கு உபாதான காரணமாயிருப்பது; [மேலும்] பிந்துவானது ஒரு ஜடப்பொருள்.

### ஷடத்துவா

பிருதிவி முதல் சிவதத்துவமீறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்கள் தத்துவாத்துவா எனப்படும்; காலாக்னி புவனம் முதல் அநாச்ரித புவனம் ஈறாக உள்ள இருநூற்றிருபத்துநான்கு உலகங்கள் புவனாத்துவா என வழங்கப்படும்; அகாரம் முதல் க்ஷகாரம் ஈறான ஐம்பத்தோறு எழுத்துக்கள் வர்ணாத்துவா எனப்படும்; வியோமவியாபி மந்திரத் திலுள்ள எண்பத்தோறு பதங்கள் பதாத்துவா எனப் படும்; மூலப்பிரஹ்மமந்திரங்கள் ஐந்தும் அங்கமந்தி ரங்கள் ஆறும் சேர்ந்து பதினோறு மந்திரங்கள் மந்திராத்துவா எனப்படும்; நிவிருத்தி முதலிய ஐந்து கலைகள் கலாத்துவா என்றும் வழங்கப்படுகின்றன. இவற்றுள் கலா, தத்துவம், புவனம் ஆகிய மூன்று அத்துவாக்களும் திரவியங்களாம்; வர்ணம், பதம்,

மந்திரம் ஆகிய மூன்றும் சப்தங்களாம். இவற்றுள் புவனாத்துவா தத்துவாத்துவாவின் துணைகொண்டும், தத்துவாத்துவா கலாத்துவாவின் துணைகொண்டும் விளங்குகின்றன. வர்ணம், பதம், மந்திரம் ஆகிய மூன்று அத்துவாக்களும் புவனங்களில் தோன்றும் உடல்களின் தேவைக்காக அமைகின்றன. இந்த ஆறு அத்துவாக்களுக்கும் முழுமுதற் காரணமாயிருப்பது குண்டலினீ, சுத்தமாயை, சுத்தவித்தியா, பிரஹ்ம எனப் பலவகையாக வழங்கப்படுகிறது. அசுத்தாத்துவாவிற்கு முழுமுதற் காரணமாயிருப்பது அசுத்தமாயை. இந்த ஆறு அத்துவாக்கள் அடங்கியதே ஆன்மாக்களின் சம்சாரம் என வழங்கப்படுகிறது.

## மூவகைப் பசுக்கள்

ஆன்மாக்கள் [மேற்கூறப்பட்ட] ஷடத்துவாவினின்றும் வேறுபட்டவர்கள்; அழிவின்றி என்றும் இருப்பவர்கள்; எங்கும் வியாபித்து இருப்பவர்கள்; அறிவுடையவர்கள்; ஒவ்வொரு உடலிலும் தனித் தனியே வேறுபட்டு இருப்பவர்கள்; மலத்தினால் மறைப்புண்டவர்கள்; செயல்களைச் செய்பவர்கள்; அவற்றின் பலனை அனுபவிப்பவர்கள்; சிற்றறிவு

படைத்தவர்கள்; செயல்களைச் சிறிய அளவில் செய்யும் ஆற்றலை மட்டுமே உடையவர்கள்; ஈசுவரனுடைய ஆளுமைக்குட்பட்டவர்கள். இந்த ஆன்மாக்கள் மலங்களின் மறைப்புக்கேற்ப சகலர், பிரளயாகலர், விஞ்ஞானாகலர் என மூவகைப்படுவர். இவ்வான்மாக்களின் மாயாமலபந்தமானது கலை முதல் பிருதிவி ஈறாக உள்ள தத்துவங்களும், பற்பல புவனங்களும் அங்கு உண்டாகும் உடல்களுமாகும்; கருமபந்தமானது ஜ்யோதிஷ்டோமம் முதலான [சாத்திரத்தில் கூறப்பட்ட] கருமங்களாலும், பிரஹ்ம ஹத்தி முதலான [விலக்கப்பட்ட] கொடிய கருமங் களாலும் உண்டாகும் அபூர்வம் என்னும் ஒருவித ஸம்ஸ்காரம்; இது புரியஷ்டகமெனப்படும் சூக்ஷ்ம உடலில் இருப்பது; புத்திதத்துவத்தை இருப்பிட மாகக் கொண்டு சுகம், துக்கம், மயக்கம் ஆகிய பலன்களைக் கொடுப்பது.

### ஐவகைப் பாசங்கள்

[ஆணவ]மலமென்னும் பந்தமானது ஆன்மாக் களின் ஞானம் மற்றும் கிரியை ஆகிய சக்திகளை மறைக்கிறது; ஒவ்வொரு ஆன்மாவிற்கும் தனித் தனியே வேறுபட்டு இருப்பது; தன்னுடைய கால எல்லைவரை இருந்து பலவிதமான ஆற்றல்களைக்

கொண்டு இயங்குவது; இந்த மலமானது என்றுமி ருக்கும் அழிவற்ற நிலையான ஜடப் பொருள்.

பிந்து என்னும் பந்தமானது சுத்தவித்தியை, வித்தியேசுவரர்கள் ஆகியோரின் உடல் தோன்று வதற்குக் காரணமானது; சகலரென்னும் சம்சாரத் திலுழலும் ஆன்மாக்களுக்குப் பலவிதமான அனுபவங்கள் நிகழ்வதற்குச் சாதனமாக இருப்பது; சூக்ஷ்மம் முதல் வைகரீ ஈறாக உள்ள நான்குவித சப்தங்களுக்குப் பிறப்பிடமாக விளங்குவது.

நிரோதசக்தி எனப்படும் பந்தமானது மாயை, கருமம், ஆணவம், பிந்து எனப்பட்ட நால்வகைப் பாசங்களுக்கும் காரணமாக விளங்குவது; இது சிவபெருமானின் சக்தியே; பாசம் என உபசாரமாக வழங்கப்படுகிறது. இவ்வாறு ஆன்மாக்களின் பந்தங்கள் ஐவகைப்படுகின்றன.

இங்கு, சுத்தாத்துவாவிலிருப்பவர்களுக்கு பிந்து, ரோதசக்தி என் இருவகைப் பந்தமே; மிசிராத்துவா விலிருப்பவர்களுக்கு மேற்கூறிய இரண்டு, மற்றும் ஆணவம், கருமம் என நால்வகைப் பந்தங்கள்; அசுத்தாத்துவாவில் இருப்பவர்களுக்கு மேற்கூறிய நான்கும் மற்றும் மாயை என ஐந்து பந்தங்கள். இவர்களில் சுத்தாத்துவாவில் இருப்பவர்களுக்கு முத்தி பெற்ற ஆன்மாக்களைப் போல் அளவற்ற சுகம் ஒன்றுதான்; துக்கத்துடன் கூடிய சுகமோ, துக்கமோ

அல்லது மயக்கமோ அவர்களுக்கு இல்லை. இக்காரணம் பற்றியே இது சுத்தாத்துவா எனப் படுகிறது.

மிசிராத்துவாவிலிருப்பவர்களுக்கோ மலநீக்கம் பெற்றவர்களைத் தவிர ஏனையோர்க்குக் குறிப்பிட்ட எல்லையுடன் கூடிய எல்லாவற்றையும் அறியும் ஆற்றல் உண்டு; [ஆனால்] இவர்களுக்கு சுகம், துக்கம், மயக்கம் ஆகியனவும் உண்டு. இக்காரணம் பற்றியே இது மிசிராத்துவா என அழைக்கப்படுகிறது.

அசுத்தாத்துவாவில் இருப்பவர்களுள் மலநீக்கம் பெற்றவர்களைத் தவிர ஏனையோருள் சிலருக்குக் குறிப்பிட்ட அளவுடன் கூடிய எல்லாவற்றையும் அறியும் ஆற்றல் இருந்த போதிலும் [மற்றவர்களுக்கு] சிற்றறிவு, சிறிய செயல்களைச் செய்யும் ஆற்றல், சுகம், துக்கம், மயக்கம் ஆகியனவும் உண்டு; ஆதலின் இது அசுத்தாத்துவா என வழங்கப் படுகிறது.

இப்பாசங்களில் பிந்துவும் மாயையும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஆன்மாவைப் பற்றி நின்று பிறகு நீங்ககூடியவை; கரும பாசமானது நதிநீரோட் டத்தைப் போல் தொடக்கமற்று இருப்பினும் இடையில் எந்தத் தடையுமின்றி இருப்பது; இது தன்னுடைய பயனான சுகதுக்கங்களை ஆன்மா

அனுபவிப்பதன் மூலம் அழிகிறது. ஆணவமலமானது எல்லாப் பாசங்களுக்கும் ஆதாரமாகவும் அடிப்படை யாகவும் இருந்து கொண்டு தன்னுடைய பக்குவ நிலையை அடைந்தவுடன் பரமேசுவரரின் அருட் சக்தியின் வெளிப்பாடான தீக்ஷையினால் நீங்கு கிறது. கருமபாசமானது ஈசுவரஞானத்தை நன்கு உணர்ந்து அறிவதன் மூலமாகவோ, யோகப் பயிற்சி யினாலோ, சந்நியாசம் மேற் கொள்ளுவதாலோ அல்லது அக்கருமங்களின் பயனாகிய சுகதுக் கங்களை அனுபவிப்பதனாலோ அழிகிறது. மேற் கூறப்பட்ட ஞானம் முதலானவை சாத்திரங்கள் வாயிலாக அறியப்படுபவை.

## ஐவகைச் சாத்திரங்கள்

அந்த சாத்திரங்கள் லௌகிகம், வைதிகம், ஆத்யாத்மிகம், அதிமார்கம், மாந்த்ரம் என ஐவகைப்படுவன. இவற்றுள், லௌகிகம் எனப் படுவது ஆயுர்வேதம், குற்றங்களை ஆராய்ந்து தண்டனை முதலியவற்றை வழங்கும் நீதி சாத்திரம் ஆகியன; இச்சாத்திரங்களின் பலன்கள் நேரிடையாகக் காணக்கூடியன.

வைதிகமானது வேதங்களில் கிரியாபாகத்தில் விதிக்கப்பட்ட ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங் களின் மூலம் அடையப்படும் சுவர்க்கம் முதலிய

பலன்களைப் பற்றி ஆராய்ந்து அவ்வேதங்கள் நம்மனோர் போன்ற மனிதர்களால் ஆக்கப்படாமல் ஈசுவரனால் ஆக்கப்பட்டன வென்று நிறுவும் மீமாம்சா சாத்திரமும், பதார்த்தங்கள் பிரமாணங்கள் ஆகியவற்றை ஆராயும் நியாயவைசேஷிக சாத்திரங்களுமாகும்; இம்மூன்று சாத்திரங்களின் பலன்களும் நேரிடையாகப் புலப்பட்டும் புலப்படா மலும் இருப்பவை.

ஆத்யாத்மிகம் எனப்படுபவை சாங்கியம், பதஞ்ஜலி முனிவரால் இயற்றப்பட்ட யோக சாத்திரம், உபநிஷத்துக்களை ஆதாரமாகக் கொண்டு முனிவர்களால் இயற்றப்பட்ட வேதாந்த சாத்திரம் ஆகியன; இவை ஆன்மஞானத்தைக் கொடுப்பன.

அதிமார்கம் எனப்படுபவை ருத்திரனால் இயற்றப் பட்ட பாசுபதம், காபாலம், மஹாவிரதம் முதலிய சாத்திரங்கள்.

மாந்திரம் எனப்படுவது சிவபிரானால் அருளப்பட்ட சித்தாந்தசாத்திரங்களாகும்.

## மீமாம்சா சாத்திரம்

மீமாம்சா சாத்திரத்தை இயற்றியவர் ஜைமினி என்னும் முனிவர். இச்சாத்திரத்தில் விளக்கப்படும் பொருள்களாவன: சொற்றொடர்களால் அமைந்த வாக்கியங்களின் இலக்கணம், வேதங்கள் மனிதர் களால் இயற்றப்பட்டவை அல்ல என்னும் கருத்து, இவ்வுலகமானது என்றுமுள்ள நிலைப்பொருள் என்னும் கருத்து முதலியன. [வேதங்களில் விதிக்கப் பட்ட] யாகம் முதலிய இஷ்டம் எனப்படும் கருமங் களும், [பொதுமக்களுக்குதவும்] பூர்த்தம் என வழங்கப்படும் கருமங்களும் தவறாமல் செய்யப்பட வேண்டும் என்னும் கருத்து; அனுட்டிக்கப்படும் கருமங்களே சுவர்க்கம் முதலிய பலனை அடையச் சாதனம் என்னும் கருத்து; ஆன்மாவானது ஐம்பூதங் களால் ஆன உடல், இந்திரியம் ஆகியவற்றினும் வேறானது என்னும் கருத்து; அவ்வான்மாக்கள் பல என்னும் கருத்து; அவற்றினின்றும் வேறான ஈசுவரன் ஒருவன் இல்லை என்னும் கருத்து ஆகியனவும் [இச்சாத்திரத்தில்] விளக்கப்பட்ட கருத்துக் களாகும்.

## வைசேஷிகசாத்திரம்

வைசேஷிகசாத்திரத்தில் விளக்கப்படும் பொருள்களாவன: நிலம், நீர், நெருப்பு, காற்று என்னும் நான்கு பூதங்களும் அழிவற்றவை அல்ல; இவற்றிற்குக் காரணமாக இருப்பவை இப்பெயர் களைக் கொண்டு விளங்குவனவும் இவற்றினின்றும் வேறானவுமான பரமாணுக்கள்; ஐந்தாவது பூதமான ஆகாயம் இந்நான்கினின்றும் வேறுபட்டு நின்று ஒலிக்குக் காரணமாக விளங்குவது; அது என்று முள்ள பொருள், [அது] எங்கும் வியாபித்திருப்பது; இதனின்றும் வேறான காலம், ஈசுவரன், திக்குகள் ஆகியன வும் என்றுமுள்ள அழியாப் பொருட்கள்; இவை யெல்லாவற்றினின்றும் வேறுபட்டு விளங்கும் ஆன்மாக்கள் உருவமற்றவை, அழிவற்றவை, எண்ணற்றவை; மேற்கூறியவற்றினின்றும் வேறு பட்டது மனம்; [அது] அழிவற்றது, [ஆன்மாக் களுக்கு] அறிவு நிகழ்வதற்குக் காரணமானது; ஒவ்வொரு ஆன்மாவுக்கும் தனித்தனியே வேறுபட்டு இருப்பது; நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், காலம், திக்குகள், ஆன்மா, மனம் ஆகியன ஒன்பது திரவியங்கள்; இவற்றினின்றும் வேறானது வெண்மை

முதலிய நிறங்களைக் குறிக்கும் குணம்; மேலே எழும்புதல் ஆகிய செயல்களைக் குறிக்கும் கருமம்; இதனின் வேறான பசுத்துவம் முதலிய பொதுத் தன்மையைக் குறிக்கும் சாமான்யம்; துணியில் வெண்ணிறம் என்னும் சமவாயம்; மேற்கூறப்பட்ட திரவியம், குணம், கருமம், சாமான்யம், சமவாயம் என்னும் ஐந்தினின்றும் வேறுபட்டது ஆறாவதான விசேஷம் [என்னும் பதார்த்தம்]; இவற்றுள் ஆன்ம பதார்த்தத்திற்கு மனதுடன் தொடர்பு ஏற்படும்போது அதற்கு ஞானம் நிகழ்கிறது. இதன்மூலம் புண்ணியம், பாவம் என்னும் கருமங்கள் நிகழ்கின்றன; [அவற்றுள்], பாவத்தினால் பாவகருமங்களும், புண்ணியத்தினால் புண்ணியகருமங்களும் நிகழ் கின்றன. இவற்றால் [தக்க] உடலும் இந்திரியங் களும் உண்டாகின்றன; புண்ணியபாவகருமங்களுக் கேற்ப சுவர்க்கநரகங்களும் ஏற்படுகின்றன; இவை எல்லாவற்றையும் ஏற்று நடத்துபவர் ஈசுவரன்; இவர்க்கு மனதின் தொடர்பினால்தான் ஞானம் ஏற்படுகிறது சுயமாகவே விளங்கும் ஞானம் இல்லை; இவ்வாறான ஆன்மாக்களுக்கு மேற்கூறப்பட்ட பதார்த்தங்களின் ஒத்த மற்றும் வேறுபட்ட ஞானத்தினால் கருமங்களின் அழிவு ஏற்படுகிறது; மனதுடன் தொடர்பு நிகழ்வதால் ஏற்படும் ஞானம்

இல்லையேல் இவ்வான்மா ஒருகல்லைப் போல் சடமாக இருக்கும்; இந்நிலையே மோட்ச மெனப்படும்; வேதங்கள் ஈசுவரனால் அருளப் பட்டவை.

## நியாயசாத்திரம்

நியாயசாத்திரத்தில் கூறப்படும் பொருள்களாவன: பிரத்தியட்சம் முதலிய பிரமாணங்கள், அவற்றால் அறியப்படும் பொருள்கள் ஆகியன வைசேஷிக சாத்திரத்தில் கூறப்பட்டவைகளே. பதார்த்தங்கள் பதினாறு வகைப்பட்டவை, மோட்சத்தின் இலக் கணமும் அச்சாத்திரத்தில் கூறப்பட்டவிதமே; ஈசுவரன் இவை எல்லாவற்றையும் இயக்குபவர், என்றும் உள்ளவர். வைசேஷிகம் நியாயம் என்னும் இரு சாத்திரங்களையும் வகுத்தவர்கள் முறையே கணாதர் அக்ஷபாதர் என்னுமிருவர்.

## சாங்கியசாத்திரம்

சாங்கியசாத்திரத்தில் கூறப்படும் பொருள்க ளாவன: பிரகிருதி என்றுமுள்ள பொருள், வியாப கமானது, அறிவற்ற சடப்பொருள், எல்லாப் பொருள் களுக்கும் காரணமாகத் திகழ்வது, அது சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்களின் சமமான

நிலை; உருவற்றது; புத்தி தத்துவம் முதல் பிருதிவீ தத்துவம் ஈறான இருபத்திநான்கும் இதன் காரியங்கள்; இவ்விருபத்திநான்கு தத்துவங்களினின்றும் வேறாயும், அழிவற்று என்றும் விளங்குவதாயும், வியாபகமாயும், உருவற்றதாயும் எண்ணற்றதாயும், சருவவல்லமை மற்றும் சருவஞானம் ஆகிய ஆற்றல்கள் அற்றதாயும், ஞானம் மட்டுமே தன் உண்மைச் சொரூபமாகக் கொண்டவையாகவும் விளங்குவன ஆன்மாக்கள்; இவ்வாறு மொத்தம் இருபத்தைந்து தத்துவங்கள்; பெத்தநிலையிலும் முத்திநிலையிலும் இவ்வான்மாக்களில் எந்தவித வேறுபாடோ தங்களின் தன்மையில் அசுத்தியோ இல்லை; தொடக்கமில் காலந்தொட்டு புத்தியில் இருக்கும் அஞ்ஞானத்தின் வயப்பட்டு சம்சாரத்தில் உழன்று சுகத்தையும் துக்கத்தையும் அறிந்து கொள்ளும் அறிவு நிகழ்கிறது; பிரகிருதியினின்றும் புருஷனான [ஆன்மாவை] வேறுபடுத்தி அறிவதால் மேற்கூறிய அஞ்ஞானம் அழிகிறது; அந்நிலையே மோட்சமெனப்படும். ஆன்மாவினின்றும் வேறு பட்ட ஈசுவரனென ஒருவர் இல்லை. இச்சாத்திரத்தை வகுத்தவர் கபிலர்.

## பாதஞ்ஜலசாத்திரம்

பாதஞ்ஜலசாத்திரத்தில் கூறப்படுவதாவது: பிரகிருதியும் அதன் வேறுபாடுகளான [தத்துவங் களும்], ஆன்மாவின் பந்தம் மற்றும் மோக்ஷம் முதலியவைகளும், விவேகஞானத்துடன் கூடிய யோகமும், யோகத்தின்வகைகளும் செய்முறை களுமாம். இருபத்தாறாவது தத்துவமாக விளங்குவது ஈசுவரன்; மற்றைய ஆன்மாக்களினின்றும் இவர் வேறுபட்டவர்; தன்னில் அடங்கி நிலைபெற்றி ருப்பதே நிருவாணம்; பொருட்களின் அடிப்படையான நிலையையும் ஆன்மஞானத்தையும் இவர் உபதேசிக் கிறார் என்பனவுமாம். இச்சாத்திரத்தை வகுத்தவர் பதஞ்ஜலி.

## நால்வகை வேதாந்திகள்

பாஸ்கரீயர், மாயாவாதிகள், சப்தப்பிரஹ்மவா திகள், கிரீடாப்பிரஹ்மவாதிகள் என வேதாந்திகள் நால்வகைப்படுவர். இவர்களுள் பாஸ்கரீயர்களின் கொள்கைகளாவன: சடமாகவும், அறிவுடைய தாகவும், தேவர்கள், மனிதர்கள், விலங்குகள் எனவும் விளங்கும் இந்தப் பரந்த உலகங்களெல்லாம் பிரஹ்மத்தின் பரிணாமமே; இந்தப் பிரஹ்மமானது சத், சித், ஆனந்தமாய் என்றுமுளதாய், எங்கும் வியாபித்து

நிறைந்தும் இருப்பது; இப்பிரஹ்மம் தான் [இவ்வுலகங்களுக்கெல்லாம்] ஈசுவரன்; இதன் பரிணாமங்களையும், மாறுபாடுகளையும் அறியாது இந்த சம்சாரமானது தொடர்ந்து இயங்கிக்கொண்டிருக்கிறது; உண்மைநிலையில் ஒரே ஒரு பொருளே நிலையான உள்பொருள், மற்றெல்லாம் இதன் மாறுபாடுகளே; வேதாந்தஞானத்தினால் இவ்வுடலினின்றும் வேறுபட்டதாகிய ஆன்மாவினைப் பற்றிய அறிவு விளங்கும்; இவையெல்லாம் பரப்பிரஹ்மமே என்றுணர்ந்து அதிலேயே இலயித்து அடங்குவதே மோக்ஷமாகும்.

மாயாவாதிகளோ முன்பு கூறிய பரபிரஹ்மமே என்றும் உள்ள உண்மையான நிலைப்பொருள், புலன்களால் அறியப்படும் இந்தப் பரந்த உலகமானது கிளிஞ்சல் வெள்ளியாகத் தோன்றுவது போன்ற [ஒரு தோற்றமே]; உண்மையல்ல, இவ்வுலகத்துக்கு உபாதானகாரணமாகத் திகழ்வது மாயையே, அது பிரஹ்மத்தைப் போல் உண்மைப் பொருளுமல்ல, முயற்கொம்பு போல் ஓர் இல்லாத பொருளுமல்ல; மாயையினின்றும் வேறுபட்டு விளங்குவது பிரஹ்மம், அதுவே தான் [இந்த ஆன்மா] என வேதாந்த ஞானத்தினால் [நன்கு] அறிவதே

மோக்ஷம் என்னும் கொள்கை யுடையவர்கள்.

[எல்லாவற்றிற்கும்] காரணமாகத் திகழும் பரப்பிரஹ்மமானது அறிவுக்கும் புலன்களுக்கும் விளங்கும் நிலயில் சப்தப்பிரஹ்மம் என வழங்கப் படுகிறது. ஜடமாகவும் அறிவுடையதாகவும் இருக்கும் எல்லாப் பொருள்களும் இதன் விகாரங்களே; அவை யாவும் நிலைப்பொருட்களல்ல; அழியாது என்றும் விளங்குவது சப்தப்பிரஹ்மமே; இவ்வாறு நன்கு அறிந்து உணர்வதே மோக்ஷமாகும் - இதுவே சப்தப் பிரஹ்மவாதிகளின் முக்கிய கொள்கை.

மேற்கூறிய பிரஹ்மம் நானே; நான் ஒருவன் மட்டில் இல்லாமல் எல்லாவிதமான [ஜடம் மற்றும் அறிவுடைப்] பொருளாகவும் நானாகவே இருந்து அவற்றுடன் விளையாடுகிறேன்; அது என்றுமுள்ள பொருள், அதுவே நான் என அறிவதே மோக்ஷம் என்று கிரீடாபிரஹ்மவாதிகளின் கொள்கை.

## ஆத்திக நாத்திக சாத்திரங்கள்

மீமாம்சை, வைசேஷிகம், நியாயம், சாங்கியம், பாதஞ்ஜலம், வேதாந்தம் என சாத்திரம் அறுவகைப் படும். இவற்றுள் வேதாந்தம் ஒன்றே அத்துவிதக் கொள்கையுடையது; மற்றவை பேதவாதமெனும் துவைதக் கொள்கை கொண்டவை. இவற்றைத் தவிர வேதத்திற்குப் புறம்பானவை நாத்திக சாத்திரங்கள் எனப்படுபவை.

## உலகாயதசாத்திரம்

நாத்திக சாத்திரங்களாவன யாவை எனில், பௌத்தம், ஆருஹதம், உலகாயதம் என மூன்றாம்; இம்மூன்றனுள் உலகாயதக் கொள்கைகளாவன: பிரத்தியக்ஷம் ஒன்றே பிரமாணம், பிரத்தியக்ஷமாக அறியப்படும் நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகிய நான்கும் உண்மைப் பொருள்கள்; இந்நான்கின் கலவையே ஆன்மா; உடல் வளர்ச்சியினால் ஞானம் வளர்கிறது, உடல் நலிந்தால் ஞானம் குறைகிறது; ஈசுவரன் என ஒருவன் இல்லை; புலன்களால் உணர்ந்து அறியப்படும் சுகதுக்கங்களே முறையே சுவர்க்கம் நரகம் என வழங்கப்படும்; உடல் அழிந்த பின்னும் அழியாத அதிருஷ்டம் என ஒன்று இல்லை; ஆதலின் இவ்வுடலைத்தவிர [சுகதுக் கங்களை] உணர்ந்தறியும் ஆன்மா என ஒன்று இல்லை. உலகாயதசாத்திரத்தை வகுத்தவர் பிருஹஸ்பதி.

## பௌத்தசாத்திரம்

பௌத்தசாத்திரத்தில் கூறப்படும் பொருள்களாவன: பிருதிவீதத்துவம் முதல் புத்திதத்துவமீறானவை இருபத்திமூன்று; இவற்றுள் புத்திதத்துவம் பிரதானம்; ஐம்பூதங்களாலான உடலில் புத்திதத்துவமே ஆன்மா; அதுவே முக்கியமான பொருள்; புத்திதத் துவத்திற்குக் கீழுள்ள மற்றவை யாவும் ஒருகண நேரமே இருப்பவை; இவை தவிர என்றுமுடைத்தான ஆன்மாவோ, ஈசுவரனோ கிடையாது; இச்சாத் திரத்தை வகுத்தவர் சுகதர். அடையப்படும் மோக்ஷமானது நீரோட்டத்தைப் போல் என்றும் அறியப்படுவதாகிய ஞானத்தொடர்ச்சியே; சுகதுக் கங்களின் தொடர்பின்றி என்றும் அறியப்படுவதாகிய ஞானத்தொடர்ச்சியே மோக்ஷம் எனச் சிலரது கொள்கை; தொடர்ந்து எரியும் விளக்கானது அதன் திரியோ அல்லது எண்ணெயோ குறைந்தால் அணைந்து விடுவதுபோல் ஞானத்தொடர்ச்சியின் அழிவே மோக்ஷம் என்றும் சிலர் கொள்வர்; இவர்கள் சௌத்திராந்திகர், வைபாஷிகர், மஹாயானிகர், மாத்தியமிகர் என நால்வகைப்படுவர்; இவர்களுள் சிலர் பிரத்தியக்ஷமாக அறியப்படும் பொருள்கள் யாவும் உண்மையற்றவை, ஞானத் தொடர்ச்சியே

அழிவற்ற நிலைப்பொருள் எனக் கொள்கின்றனர்; மற்றும் சிலர் எல்லாப் பொருள்களும் உள் பொருள்களே, ஆனால் அவையாவும் ஒரு கண நேரமே இருப்பவை எனக் கொள்கின்றனர்.

## ஆருஹதசாத்திரம்

ஆருஹதசாத்திரத்தை வகுத்த அருஹர் அநாதியே உள்ளவர்; ஜீவன் என அநாதியே வழங்கப்படும் ஒரு பொருளானது அநாதி காலந் தொட்டே குற்றத்துடன் கூடியது; இப்பருவுடல் வளர்ந்தால் ஜீவனும் வளர்கிறது, குறைந்தால் குறைகிறது; மற்ற இந்திரியங்களும் உள்ளன; இவையாவும் ஹிம்ஸை, அஹிம்ஸை என்றோ அல்லது அஸ்திகாயம், நாஸ்திகாயம் என்றோ கூறப்படுகின்றன; அருஹர் அருளிய சாத்திர ஞானத்தினாலும், அவற்றில் விளக்கப்பட்ட சூடேறிய பாறையில் உறங்குதல் ஆகிய தவத்தினாலும் ஹிம்ஸை முதலிய குற்றங்கள் அழியும்; அதன் மூலம் அருஹனைப் போல் குற்ற மற்று விளங்குகிறது; இச்சாத்திரங்களும், அவற்றில் விளக்கப்பட்ட பொருள்களும் உள்ளனவோ அல்லது இல்லையோ என வினவிடில், உள்ளது, இல்லை, உளது இல்லை என மூவகையாக விளக்கப் படுகின்றன; மேற்கூறிய மூவகைச் சாத்திரங்களும்

வேதநெறிக்குப் புறம்பானவை; ஈசுவரனெனும் அநாதியே உள்ள பொருள் ஒன்று இல்லை என இம்மூவரின் கொள்கை; இம்மூவரும் நெறியற்றவர்கள்; [ஆதலின்] நாத்திகர்கள் என வழங்கப் படுவர்.

### அறுவகை வேதசாத்திரங்கள்

வேதசாத்திரங்கள் அறுவகைப்படும்; அவற்றிற்கு உற்பத்தித் தானமாகத் திகழ்வது ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் எனப்பட்ட நால்வகை வேதங்களாம்; இவற்றிற்கு அங்கங்களாவன: சந்தோவிசிதி, கல்பம், சிக்ஷை, வியாகரணம், நிருக்தம், ஜியோதிஷம் என ஆறுசாத்திரங்கள்; பிராஹ்மணர் முதலிய வர்ணங்களுக்கும் பிரஹ்மசரியம் முதலிய ஆசிரமங்களுக்கும் உரிய தருமங்களைச் செய்யவேண்டியன (விதி), செய்யக்கூடாதன (தோஷம்) என இருவகைப்படுத்தி மந்திரம், பிராஹ்மணம் என்னும் நூல்வகைவாயிலாகவும் பிரகிருதி, புருஷன், ஈசுவரன் ஆகிய செய்திகளை உபநிடதங்கள் வாயிலாகவும் விளக்குதல் வேதங்களின் முக்கியக் கருத்து; இவ்வாறான வேதநெறிகளைத் தோற்றுவித்தவையும், சௌசம், பிராயச்சித்தம் முதலிய ஆசாரங்களை நெறிப்படுத்துபவையும் மநுஸ்மிருதி முதலிய பதினெண்வகை

ஸ்மிருதிகளாம்; இச்சாத்திரங்களை வகுத்தவர்கள் மநு முதலிய மஹரிஷிகள்.

## பாஞ்சராத்திரசாத்திரம்

வாஸுதேவரால் வகுக்கப்பட்ட பாஞ்சராத்திரசாத்திரம் கூறும் செய்திகளாவன: மேலே சொன்ன இருபத்திநான்கு தத்துவங்களுள் குணதத்துவத்திற்கும் மேல் இருபத்தியைந்தாவதாக இருப்பது வாஸுதேவர்; இதற்கும் மேல் பரம்பொருள் எதுவுமில்லை; வியூஹங்கள் எனப்படும் கிருஷ்ணர், அநிருத்தர், மகரத்துவஜர், ரௌஹிணேயர் ஆகிய நால்வரும் உலகசிருஷ்டியின் பொருட்டுத் தோன்றுகின்றனர்; இந்நால்வராலும் ஜடம் மற்றும் உயிருள்ள ஜீவன்களையும் கொண்ட இவ்வுலகானது தோற்றுவிக்கப்படுகின்றது; வேதாந்தசாத்திரத்தில் கூறப்பட்ட பரிணாமவாதத்தை அநுசரித்து இவ்வுலகம் முழுவதும் வாஸுதேவர் ஒருவராலே வியாபிக்கப்பட்டுள்ளது; வேதம் முதலியவற்றில் மனிதர்களால் அடைய வேண்டிய மிக உயர்ந்த பொருள் எதுவும் இல்லை, பாஞ்சராத்திர சாத்திரங்களில் தான் அவை உள்ளன; எனவே, பாஞ்சராத்திர சாத்திரங்களில் கூறப்பட்டவாறு தீக்ஷை முதலியன செய்துகொண்டு வாஸுதேவரை நன்கு வழி பட்டு அவ்வாஸுதேவரின் சொரூபத்திலே இலயம் அடைவதே மோக்ஷமாகும்.

## இதிஹாஸபுராணங்கள்

இதிஹாஸபுராணங்களில் விளக்கப்படும் பொருள் களாவன: வைதிகதருமங்கள், சாங்கியம் மற்றும் யோகசாத்திரக்கருத்துக்கள், பாஞ்சராத்திரம், பாசுபதம், சைவம் ஆகிய சாத்திரங்களின் கொள் கைகள், சிருஷ்டி, சம்ஹாரம், ராஜவமிசங்களின் வர லாறு, மன்வந்தரங்கள் எனப்படும் பலவிதமான யுகங்களின் வரலாறு முதலியன. இதிஹாஸம் மஹாபாரதம்; புராணங்கள் பதினெட்டு. இவை எல்லாவற்றையும் வகுத்தவர் வேதவியாஸர். இருபத்தி யைந்தாவது தத்துவம் ஆன்மா; தீக்ஷையினால் முக்தி கிட்டும் என்பன புராணங்களின் முக்கியக் கொள்கை.

## மூவகைப்பட்ட அதிமார்க்கசாத்திரங்கள்

### பாசுபதம்

மூவகைப்பட்ட அதிமார்க்கத்தில் பாசுபதமதத்தின் கொள்கைகளாவன: ஆன்மாக்கள் பல; வியாபக முடையன; அவை அழியாத நித்தியப் பொருட்கள்; காரியம் காரணம் ஆகியவற்றின் சேர்க்கையினால் அவர்களுள் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன.

ஆணவமலமென ஒன்று இல்லை; ஸம்ஸாரத்தில் உழலும் ஆன்மாக்கள் மாயாமலம் மற்றும் கருமமலம் ஆகியவற்றின் மூலமாக சுகதுக்கங்களை அனுபவிக் கின்றனர்; வைராக்கியமேற்பட்டு [பாசுபத] சாத்தி ரங்களில் கூறப்பட்டவாறு தீக்ஷை செய்து கொண்டு அதன் மூலம் பரமேசுவரரின் ஞானம் முதலிய குணங்கள் ஆன்மாவினிடத்தில் வந்தடைகின்றன; பிள்ளைகளினிடத்தில் குடும்பச்சுமையைக் கொடுத்துவிட்டு சன்னியாசம் மேற்கொள்ளுவது போல் ஆன்மாக்களினிடத்தில் ஞானத்தை ஏற்றி விட்டு ஈசுவரனானவர் தனது அதிகாரத் தினின்றும் ஒய்வுபெறுகிறார்.

மஹாவிரதம்

மஹாவிரதர்கள் கூறும் கருத்துக்களாவன: பாசு பதமதத்தில் கூறப்பட்ட மாயை கருமம் ஆகிய வற்றுடன் ஆணவமலமும் சேர்ந்தமும் மலங்களி னின்றும் விடுபட்ட ஆன்மாக்களுக்கு ஸம்ஸார நிலையிலும் ஞானசக்தி ஒன்று மட்டுமே உள்ளது, கிரியாசக்தி இல்லை; அச்சாத்திரத்தில் கூறப்பட்ட தீக்ஷையை மேற்கொண்டு எலும்பு மாலை அணிதல் முதலிய சரியைகளைப் பின்பற்றுவோர் முக்தி அடைகின்றனர். அம்முக்தர்களும் ஞானசக்தி

ஒன்றையே அடைவர்; ஞானசக்தி கிரியாசக்தி ஆகிய இரண்டும் பரமேசுவரர் ஒருவருக்கு மட்டுமே.

**காபாலிகசாத்திரம்**

இச்சாத்திரத்தில் பாசுபதமஹாவிரதநூல்களில் கூறியவாறே ஆன்ம இலக்கணமும் பந்த இலக்கணமும் விளக்கப்படுகின்றன; சாத்திரத்தில் கூறியவாறு தீக்ஷை மேற்கொண்டு ஒவ்வொரு நாளும் கரியதுணியினாலான கொடியைக் கையில் கொண்டு மனிதனுடைய மண்டையோட்டில் பிச்சை எடுத்து உண்ணவேண்டும்; மோக்ஷம் முதலிய கொள்கைகள் மஹாவிரதிகளைப் போன்றனவே. அதிமார்க்கம் என வழங்கப்படும் இம்மூன்று சாத்திரங்களையும் வகுத்தவர்கள் மாயாதத்துவத்திலும் வித்தியா தத்துவத்திலும் இருக்கும் உருத்திரர்களே.

## சித்தாந்தசாத்திரங்கள்

புலன்களால் அறியப்படாத பரலோகவிஷயங்களில் மக்களுக்கு நம்பிக்கை ஏற்படுத்தும் நோக்கத்துடன் பரமேசுவரனாகிய சிவபெருமானால் தன்னுடைய தத்புருஷம், அகோரம், வாமதேவம், ஸத்யோஜாதம் என்னும் கீழ்நோக்கிய நான்கு முகங்களினின்றும் தன்னால் அருளப் பட்ட விஞ்ஞானகேவலநிலையில் இருக்கும் நான்கு உருத்திரர்கள் மூலமாக அதஸ் ஸ்ரோதஸ் என வழங்கப்படும் காருடம், தக்ஷிணம்,

வாமம், பூதம் ஆகிய நால்வகைச் சாத்திரங்கள் தோற்றுவிக்கப்பட்டன.

இவற்றுள், காருடதந்திரத்தில் தத்புருஷப் பிரம்மத்தின் சொரூபத்தை நன்கு தியானித்து வழிபடுதல், பாம்பு முதலியவற்றின் விஷக்கடிக்குச் சிகிச்சை செய்வதற்கான மந்திரங்கள், மருந்துகள் ஆகியன விளக்கப்பட்டுள்ளன; தக்ஷிணதந்திரத்தில் அகோரப் பிரஹ்மத்தை தியானித்து வழிபடுதல், யோகப் பயிற்சியின் மூலம் பரமேசுவரரைக் காணுதல், எதிரிகளை வெல்வதற்கான மந்திரங்கள் முதலியன விளக்கப்பட்டுள்ளன; வாமதந்திரத்தில் வாமதேவப் பிரஹ்மத்தைத் தியானித்து வழிபடுதல், ரசவாதம் ஆகிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன; பூத தந்திரத்தில் ஸத்யோஜாதப் பிரஹ்மத்தைத் தியானித்து வழிபடுதல், பூதங்கள் பிசாசுகள் முதலியவற்றின் வாயிலாக உண்டாகும் நோய்களைத் தீர்க்கும் மந்திரங்கள், மருந்துவகைகள் ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

சக்திதத்துவத்திலிருக்கும் ஒரு ஆன்மாவினால் சாக்ததந்திரம் வகுக்கப்பட்டது; பாஸ்கரீய வேதாந்த சாத்திரத்தில் கூறியவாறு ஜடம் மற்றும் அறிவுடைப் பொருள்கள்யாவும் சக்தியின் பரிணாமமே என்பது இத்தந்திரத்தின் அடிப்படைக் கொள்கை; மேலே

கூறப்பட்ட நான்கு அதஸ்ரோதஸ் சாத்திரங்களும் சிவபெருமானால் நேரிடையாகவே வகுக்கப்பட்டன; கௌளம், யாமளம் ஆகியன மத்ஸ்யேந்திரர் முதலிய மானுடர்களால் வகுக்கப் பட்டவை.

## சாத்திரங்களின் பாகுபாடு

உலகாயத ஞானிகளுக்கு நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகியவற்றின் ஞானத்தினால் அதற்கப்பாற் பட்ட பிரபஞ்சங்களின் உற்பத்தி இல்லை; ஆருஹதர் களுக்கு குணதத்துவத்திற்குப் பின் தத்துவ உற்பத்தி இல்லை; நியாயவைசேஷிகர்களுக்குப் புத்திதத்து வத்திற்கப்பால் உலகத் தோற்றம் இல்லை; பௌத்தர் களுக்கும் புத்தி தத்துவத்திற்கு மேல் இல்லை; சாங்கியர்களுக்குப் பிரகிருதிபுருஷ விவேக ஞானத்தினால் பிரகிருதிக்கு மேல் மிசிராத்துவ தத்துவங்களின் ஞானம் ஏற்படுவதில்லை; ஆகவே, எல்லாவிதமான கருமங்களின் நாசம் உண்டாவ தில்லை; படவே, விஞ்ஞானகேவலர் என்னும் நிலையும் உண்டாவதில்லை. பாஞ்சராத்திரிக ளுக்குப் பிரகிருதிதத்துவத்திற்கு மேல் எதுவும் இல்லை; வேதாந்திகளுக்குப் புருஷதத்துவத்திற் கப்பால் எதுவுமில்லை; பௌராணிகர்கள் அரா கதத்துவத்தை மட்டில் அடைவர்; காபாலிகர்கள்

கலாதத்துவத்தை அடைவர்; பாசுபதர்கள் மாயாதத் துவத்தையும், மஹாவிரதிகள் வித்தியா தத்துவத் தையும் முறையே அடைவர்; ஊர்த்துவ ஸ்ரோதஸ் தவிர ஏனைய ஸ்ரோதஸ்களைச் சேர்ந்த காருடம், தக்ஷிணம், வாமம், பூதம் ஆகிய தந்திரங்களில் தீக்ஷை பெற்றவர்கள் சக்திதத்துவத்திலுள்ள நிவிருத்தி, பிரதிஷ்டா, வித்தியா, சாந்தி முதலிய கலைகளில் அமைந்துள்ள புவனங்களை மட்டுமே சென்றடைவர். சுத்தசாக்தர்கள் சக்திதத்துவத்தை அடைவர்; கௌளம், யாமளம் முதலிய தந்திரங்களில் ஹிம்சை, பெண்களுடன் உடலுறவு ஆகியன பின்பற்றப்படு வதால் அத்தந் திரங்களில் தீக்ஷை பெற்றோர் பிசாசம் முதலிய இழிந்த நிலையை அடைவர்.

### இருவகைச் சித்தாந்தசாத்திரம்

சிவபேதம் ருத்திரபேதம் எனச் சித்தாந்த சாத்திரம் இருவகைப்பட்டது; சிவபேதமானது பிந்துசக்தி யிலிருந்து நாதம் பிந்து எனப்பிரிகிறது; பின்பு, மாத்ருகா எனப்படும் எழுத்துவகைகளாகவும் அனுஷ்டுப் என வழங்கும் யாப்பு வகைகளாகவும் பிரிந்து மாயாபதத்தில் இருப்பவர்களும், பரமேசு வரால் அருளப்பட்டவர்களுமான பிரணவர் முதலிய பத்து சிவன்களுக்குக் காமிகம் முதலிய பத்து

ஆகமங்களாகச் சொல் வடிவம் கொண்டு பரமேசுவரருடைய ஸத்யோஜாதம் வாமதேவம் ஆகிய இரு முகங்களின் வாயிலாக அருளப்படுகின்றன. அவ்வாறே, அகோரம் தத்புருஷம் ஈசானம் அகிய மூன்று முகங்களின் வாயிலாகப் பதினெட்டு ருத்திரர்களுக்கு அருளப்பட்டவை விஜயம் முதலான பதினெட்டு ருத்திரபேத ஆகமங்களாம்; ஒவ்வொன்றுக்கும் ஒருகோடி கிரந்தங்களாக இருபத்தெட்டு ஆகமங்களுக்கும் இருபத்தெட்டு கோடி கிரந்தங்களாம். இவ்விருபத்தெட்டு ஆகமங்களுக்கும் ஸித்தாந்தம் எனப் பெயர்.

## ஞானபாதச் செய்திகள்

இவ்வாகமங்கள் ஞானம், கிரியை, யோகம், சரியை என நான்கு பாதங்களை உடையன; ஞானபாதத்தில் பரமேசுவரரின் உண்மைச் சொரூபம், விஞ்ஞானாகலர், பிரளயாகலர், ஸகலர் என மூவகைப்பட்ட ஆன்மாக்களின் சொரூபம், ஆணவம், கருமம், மாயை, பிந்து, ரோத சக்தி எனப்பட்ட ஐவகைப் பாசங்களின் சொரூபம், சக்தியின் சொரூபம், சிவதத்துவம் தொடங்கி பிருதிவீ தத்துவமீறான முப்பத்தாறு தத்துவங்களின் சிருஷ்டி, ஆன்மாக்களால் உய்த்து உணருவதற்குச் சாதனமான இவற்றால் எதிர்

காலத்தில் ஏற்படும் செயல்கள், புவனம் புவனே சுவரர்கள் ஆகியவற்றின் சொரூபம், புவனங்களின் பரப்பு, அளவு ஆகியன, அதப்பிரளயம், மத்தியப் பிரளயம், மஹாபிரளயம் ஆகியவற்றின் சொரூபம், பிரளயத்திற்குப் பிறகு சிருஷ்டியின் முறை, பாசுபதம், மஹாவிரதம், காபாலம் ஆகிய சாத்திரங்களின் தத்துவக் கோட்பாடுகளை விளக்கி அவற்றைப் பூருவபக்ஷமாகக் கொண்டு சைவசித்தாந்த சாத்திரத்தின் கோட்பாடுகளை நிறுவுதல் ஆகியன விளக்கப்படுகின்றன.

## கிரியாபாதச் செய்திகள்

மந்திரோத்தாரம், ஸந்தியாவந்தனம், பூஜை, ஜபம், ஹோமம் ஆகியன, ஆன்மாக்களுக்கு உலக போகங்களை அனுபவிப்பதற்கும் முத்திப் பேறு அடைவதற்கும் சாதனமாகத் திகழ்வதும் சமயம், விசேஷம், நிருவாணம், ஆசாரியாபிஷேகம் என நால்வகைப்பட்டதுமான தீக்ஷை முதலியன கிரியா பாதம் விளக்கும் செய்திகள்.

### யோகபாதச் செய்திகள்

இதே முப்பத்தாறு தத்துவங்கள், தத்துவேசுவரர்கள், ஆன்மா, பரமேசுவரர், சக்தி, உலகிற்குக் காரண மான மாயை மஹாமாயை முதலியவற்றின் செயல் பாடுகள், சித்தி ஆகியவற்றை வேண்டுவோர்க்கு அணிமா முதலிய எண் வகைச் சித்திகளின் விளக்கம், அவற்றை அடையும் முறை, பிராணாயாமம், பிரத்தியா ஹாரம், தியானம், தாரணை, ஜபம், சமாதி ஆகியவற் றின் விளக்கம், மூலாதாரம் முதலிய பத்மங்களின் விளக்கம் ஆகியன யோகபாதத்தில் கூறப்படும் செய்திகளாம்.

### சரியாபாதச் செய்திகள்

பிராயச்சித்தம், பவித்திராரோபணம், சிவலிங்கத்தின் இலக்கணம், உமாமஹேசுவரர் முதலான வியக்தலிங் கங்களின் இலக்கணம், ஸ்கந்தர், நந்தி ஆகிய கணேசுவரர்களின் இலக்கணம், ஜபமாலை, யோக பட்டம், தண்டம், கமண்டலு ஆகியவற்றின் இலக் கணம், அந்தியேஷ்டி, சிராத்தம் முதலியவற்றின் விளக்கங்கள் யோகபாதத்தில் காணப்படுகின்றன

## பற்பல பதங்களை அடைதல்

சமயஸம்ஸ்காரமெனும் [தீக்ஷையினால்] ருத்திர பதம் கிட்டும்; விசேஷதீக்ஷையினால் ஈசுவரபதம் கிட்டும்; இங்கு ருத்திரபதம் அடைவதென்பது குணத்தத்துவத்தின் முடிவிலுள்ள ருத்திரபதமே; ஈசுவரபதம் அடைவதென்பது பிரகிருதிதத்துவத்திற்கு மேலமைந்ததும் மிசிராத்துவாவில் முதல் தத்துவமுமான ராகதத்துவத்தை அடைவதே; அத்தத்துவம் அநந்தேசுவரரால் அதிட்டிக்கப்பட்டுள்ளதால் அதை அடைவதே ஈசுவரபதத்தை அடைவதாகக் கொள்ளப்படுகிறது. நிருவாணதீக்ஷையின் மூலம் சாங்கியம், பாதஞ்ஜலம், வேதாந்தம், பாஞ்சராத்திரம் ஆகிய மார்க்கங்களில் கூறப்பட்ட மோக்ஷ நிலைக்கும் மேலான பரமேசுவர சாமியம் என் னும் மிக உயர்ந்தநிலை கிட்டும்.

## பலவிததீக்ஷைகள்

ஸத்யோநிருவாணம் அஸத்யோநிருவாணம் என நிருவாணதீக்ஷை இருவகைப்படும்; ஸத்யோ நிருவாண தீக்ஷைக்கிரியை முடிந்தவுடனேயே சரீரத்தை விட்டு நீங்கி மோக்ஷத்தை அடைவர்; அஸத்யோநிருவாண தீக்ஷைக்கிரியையில் கடந்த காலத்ததும் எதிர்காலத்தில் நிகழக்கூடியதுமான கருமங்களெல்லாம் சுத்தி செய்து அழிக்கப்பட்டு

தற்காலத்தில் அனுபவிக்கப்படும் கருமங்கள் சுத்திசெய்யப்பட்டு ஆயுள்முடிவில் சரீரத்தை விட்டு நீங்கியதும் உடனே மோக்ஷத்தை அடைவர். ஸாதக தீக்ஷையால் சிவபக்தி, சிவலிங்கவழிபாடு ஆகியன இருந்தும் முடிவில் வித்யேசுவரபதம் முதலியன அடைவதில் இச்சை இருந்தால் அந்தந்த பதங்களை அடைவர்; அப்பதங்களிலுள்ளோர் விரக்தி ஏற்படின் முக்தி அடைவர். இல்லையேல் மஹாஸம்ஹார காலத்தில் முக்தியடைவர். பெண்கள், சிறுவர்கள், வயது முதிர்ந்தோர்கள், வியாதியால் பீடிக்கப் பட்டோர் முதலியோர்க்கு நிர்பீஜதீக்ஷை செய்யப்பட வேண்டும்; ஏனெனில், தீக்ஷை முடிந்தவுடன் அவர் களால் செய்யவேண்டியதான ஸந்தியாவந்தனம், சிவலிங்கபூஜை ஆகியன தீக்ஷை செய்யும்போதே ஆசாரியரால் செய்யப்பட்டுவிடுகின்றன; ஆதலின், அந்த தீக்ஷயை மேற்கொண்டோர் அவர்கள் செய்ய வேண்டிய நித்திய கருமங்களினின்றும் விடு பட்டவராகின்றனர்.

ஸபீஜதீக்ஷையானது நித்தியகருமங்களைச் செய்வ தற்குச் சக்தியுடைய ஸமயி, புத்ரகன், ஆசாரியர் முதலியோர்க்குச் செய்யப்பட வேண்டும்; அத்தீக்ஷை யின் மூலம் கடந்த காலத்ததும் வருங்காலத்ததுமான எல்லாக் கருமங்களும், அக்கருமங்கள் பக்குவமடை வதல் ஏற்படும் பலவித சரீரங்கள், பலபோகங்கள்

ஆகியன அழிக்கப்படுகின்றன; இப்பிறவியில் சரீரம் உண்டாவதற்குக் காரணமான கருமங்களும் சுகம் துக்கம்ஆகியனவும் அனுபவிக்கப்பட வேண்டி யனவே. இவ்வாறாக மூவகைக் கருமங்களும் அழிகின்றன.

## தீக்ஷைக்குப் பிறகு பின்பற்றவேண்டிய தருமங்கள்

மூவகைப்பட்ட கருமங்களும் அழிந்தபின் தீக்ஷைக்குப் பிறகு மரணம் வரையில் சாத்திரத்தில் விதிக்கப்பட்டவாறு நித்திய நைமித்திக கருமங் களைச் செய்துவருதலால் இப்பிறவியில் சரீரமேற் படக் காரணமான கருமமலசுத்திக்காக ஞானம், தவம், யோகம் ஆகியன அறிவுபூருவமாக இயற்றப்பட வேண்டும். ஆதலால் பரமேசுவரரின் அருட்சக்தியான தீக்ஷை வாயிலாகவே மோக்ஷமேற்படும்; வேறொன் றின் மூலமாகவும் ஏற்படாது. தீக்ஷைக்குப் பின் ஆசாரக் குறைவினால் ஏற்படும் குற்றங்களுள் அறிவுபூருவகமாக நிகழ்ந்தவற்றிற்குப் பிராயச் சித்தங்களால் கழிவு ஏற்படும்; மந்திரம், திரவியம் ஆகியவற்றின் குறைபடுகளால் ஏற்படும் குற்றங்கள் பவித்திராரோபணம் மூலம் நீங்கும்; அறியாமல் செய்த தவறுகள் முடிவில் அந்தியேஷ்டி வாயிலாக நீக்கப்படும்.

## விதி நிஷேதங்கள்

யமம், நியமம், ஸந்தியாவந்தனம், சிவலிங்கவழிபாடு, அக்னிகாரியம், குருவின் உபதேசங்களைப் பின் பற்றுதல், இயன்றவரை மாஹேசுவர பூஜை செய்தல் ஆகியன தீக்ஷைக்குப் பின் செய்யப்படவேண்டியன; நிர்மாலியத்தைப் புசித்தல், சிவநிந்தை, குருநிந்தை, சிவசாத்திரத்தின் மூலமடைந்த ஆசாரங்களின் நிந்தை, கடவுளுக்கான திரவியத்தைப் புசித்தல், உயிர்க் கொலை ஆகியன முற்றும் நீக்கப்பட வேண் டியன.

## முக்தியடைந்த ஆன்மாக்களின் இலக்கணம்

இவ்வாறு தீக்ஷைபெற்று அதன்படி கருமங்களை வழுவாது பின்பற்றி முடிவில் முக்தி அடைந்த ஆன்மாவின் இலக்கணம் வருமாறு: ஆணவம், கருமம், மாயை, பிந்து, ரோதசக்தி ஆகிய ஐவகை மலங்களினின்றும் முற்றிலும் விடுபட்டுப் பரமேசுவரரைப் போல எல்லாவற்றையும் அறிதல் (ஸர்வஜ்ஞத்துவம்), எல்லாவற்றையும் செய்யும் ஆற்றல் (ஸர்வ கர்த்துருத்துவம்), எப்போதும் அளவற்ற ஆனந்தம் பெற்றிருத்தல் (நித்திய திருப்தத்துவம்), தொடக்கமில் காலந்தொட்டே இருக்கும் சுவதந்திரம் (அநாதி

ஸித்த சுவதந்திரம்), ஒரு போதும் குறைவில்லாத ஆற்றல் (அலுப்தசக்தி), அளவற்ற ஆற்றல் (அனந்த சக்தி) ஆகிய அறுவகைக் குணங்களையும் பெறுவர். இருப்பினும், பரமேசுவரரைப் போல சிருஷ்டி முதலிய செயல்களைச் செய்யும் ஆற்றல் அவர்களுக்கு உண்டாகாது; விருப்பு வெறுப்பு ஆகியன முழு வதும் நீங்கியதால் சிருஷ்டி முதலியவற்றில் அவர்களின் செயல் இல்லை. [சிருஷ்டி முதலிய] ஐவகைக் கிரியை களின் மூலம் பரமேசுவரர் ஒருவரே எல்லோருக்கும் அருள்புரிகிறார்.

இவ்வாறாக எல்லாச் சமயங்களினும்
மேலானதும் சைவர்களால்
போற்றப்படுவதுமான ஸித்தாந்தப்
பிரகாசிகையானது ஸர்வாத்மசம்புவினால்
விரிவாக இயற்றப்பட்டது.

நூல் முடிவுற்றது.

# SRI AGHORASIVACHARYA TRUST

## Principles

| | |
|---|---|
| - Publishing of books on Saivasamaya Sathiram and Thirumurai. | - Publishing of rare sivagamas from Manu scriptures and old books. |
| - Setting up a Library on Sivagamas. | - Setting up a School for Vedasivagama and Thirumurai Teaching. |
| - Conduct conferences on Sivagamas. | - Carrying out of Consecration works (Thirupani) for Temples. |
| - Honoring people whose talents are in Vedas, Sivagamam, Thirumurai, Saivasidhantham, Jothidam, Sangeeth am, Nadaswaram, Thavil. | - Issue Certificates to recognize students who are well versed in Sivagamas and Thirumurai . |
| - Education fund for all poor children. | - Provide free Medical treatments for the poor. |

**SRI AGHORASICACHARYA TRUST**
**17, ma.po.ci street, M.G.R. Nagar,**
**CHENNAI 78**
**Ph: 044-24744229**
**e-mail: sriaghora@vsnl.net**
**Website: www.sriaghora.org**

# List of Members

| | |
|---|---|
| Honorary President | SivaSri K. Pichai Sivachariar, Pillayar Patti |
| Honorary President | SivaSri K. Raja Bhattar, Thirupparankundram |
| President | SivaSri R. Gangadhara Bhattar, Chennai |
| Secratary | SivaSri D. Rajesh @ Somasubramanya Bhattar, ManaMadurai |
| Secratary | SivaSri G. Karthikeya Sivam, Chennai |
| Treasurer | SivaSri G. Kalyanarsundara Sivam, Chennai |
| Auditor | Sri. G. Natarajan, Chennai |
| Advisor | SivaSri R. Muthusamy Grukkal, Thirumalai |
| Advisor | SivaSri A.M. Arunachala Gurukkal, Padur |
| Advisor | SivaSri S. Arunasundara Sivachariar, Chennai |
| Advisor | SivaSri N. Kalyanarama Sivachariar, Virudhachalam |
| Advisor | SivaSri A.V. Ravi Swaminatha Sivachariar, Mayiladuthurai |
| Advisor | SivaSri S.N. Balaganapathi Sivam, Sencherymalai |
| Member | SivaSri R. Kumarasamy Gurukkal, Madurai |
| Member | SivaSri N. Bodi Ganesa Sivam, Pillayar Patti |
| Member | SivaSri S. Gomathisankar Bhattar, Thirunelvelli |
| Member | SivaSri K. Venkatesa Sivachariar, Thirupanandal |

| | |
|---|---|
| Member | SivaSri B. Umapathy Sivam, Thirukattupalli |
| Member | SivaSri B. Chandrasekara Sivam, Thirunelvelli |
| Member | Smt. Arunasivamoorthy, Mayiladurai |
| Member | SivaSri R. Baranidhara Sivam, Mathour |
| Member | SivaSri A. Balasubramanya Sivam, Villiyanoor |
| Supporter | Sri. R. Selvakumar , Singapore |
| Supporter | Sri. S. Saparigiri, Singapore |
| Supporter | Sri. Larry Presaud, M.D U.S.A. |
| Supporter | Sri. NatarajaSriSkandaraja, London |
| Supporter | Sri. V. Chitrarasarayan, Karoor |